

குமாரி ராதிகா

**சமீபத்தில் நடந்த பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் ஒன்பது பதக்கங்களை ஒரே மாணவி திரும்பத் திரும்ப வந்து பெற்றுச் செல்வதைப் பார்த்துப் பலரும் மூக்கின்மேல் விரல் வைத்து வியந்தார்கள்.**

# இவர் வாங்கிய மெடல்களைத் தோரணம் கட்டலாம்

மருத்துவக் கல்லூரி வரலாற்றிலேயே ஒன்பது தங்க மெடல்களை ஒரு மாணவி பெறுவதென்பது இந்த ஆண்டில் முதல் தடவையாக நிகழ்ந்திருக்கிறது. அம்மாணவி டாக்டர் குமாரி ராதிகா பற்றி அவரது கல்லூரித் தோழி டாக்டர் ஏ. மீனாட்சி கூறுகிறார்:

இந்தச் சாதனையைப் புரிந்துள்ள ராதிகா பிரபல இருதய நோய் சிகிச்சை நிபுணர் டாக்டர் செந்தில்நாதனின் மகள்.

நம் வீடுகளில் விசேஷ நாட்களில் மாவிலைத் தோரணம் கட்டுவது போல் ராதிகா வாங்கிய மெடல்களைத் தோரணம் கட்டலாம்! அப்படி ராதிகா பரிசு பெற்ற பதக்கங்கள் அவர் வீட்டில் குவிந்து கிடக்கின்றன.

1978-79 முதல் 82-83 வரை மருத்துவக் கல்லூரியில் படிக்கையில் மருத்துவத்தின் பல்வேறு துறைகளில் சிறந்து விளங்கியதற்கான சான்றிதழ்கள், பதக்கங்கள், பரிசுகள் மொத்தம் பத்தொன்பது பெற்றிருக்கிறாள். 1976 முதல் 81 வரையான காலகட்டத்தில் வேறு எந்த மாணவ மாணவியை விடவும் அதிகமான பரிசுகளை, பதக்கங்களைப் பெற்றிருப்பதால் ஜான்ஸ்டன் தங்கப் பதக்கம் என்ற பெரும் கௌரவம் மிக்க மெடலும் இவரையே வந்தடைந்துள்ளது.

சுறுசுறுப்பும் புத்திசாலித்தனமும் மிக்க ராதிகாவிடம் ''இத்தனை பரிசுகளைப் பெறும் போது எப்படி இருக்கிறது?'' என்று கேட்டேன். ''தமிழகமே தேவலோகமாகத் தோன்றுகிறது'' என்றாள்! அத்தனை ஆனந்தம் அவளுக்கு. ரகசியம் ஒன்றை உடைக்கலாம் என்றால் இவள் அப்பாவுக்கே தாம் பெறாத பதக்கங்களை யெல்லாம் பெற்றுள்ள மகள் மீது கொஞ்சம் பொறாமை உண்டு! ஆனால் அந்தப் பொறாமையில்தான் எத்தனை பெருமை; மகிழ்ச்சி!

தந்தையையே மிஞ்சுமளவுக்கு மகள் பதக்கங்கள் பெற்றதற்காக அவளைக் குற்றம் சொல்லிப் பயனில்லை. ஏனெனில் இதற்கெல்லாம் ஊக்கமும் உற்சாகமும் அளித்ததே அவள் அப்பாதான்.

படிப்பு விஷயத்தில் அவர் ரொம்பக் கண்டிப்பானவர். பெரிய டாக்டரின் மகள் என்பதால் சலுகை ஏதும் கிடையாது. கார் இருந்த போதிலும் ராதிகாவைப் பஸ்ஸில்தான் கல்லூரிக்கு அனுப்புவார். பரீட்சைக்குப்போகும் போது மட்டும் ராதிகாவைத் தாமே காரில் கொண்டு வந்து விட்டுப் போவார். மருத்துவ நூல்கள் பலவற்றின் பெயர்களைக் குறிப்பிட்டு 'இதைப் படி அதைப் படி' என்று வேலை வாங்கிவிடுவார். பரீட்சையில் எப்படி விடைகளை எழுதினால் விடைகளைத் திருத்துபவரைக் கவர முடியும் என்று 'டிப்ஸ்' தருவார். என் அருமைத் தோழி ராதிகா இதையெல்லாம் என்னிடம் பகிர்ந்துகொள்வாள். இரவு எல்லோரும் சேர்ந்து சாப்பிட வேண்டும் என்பது ராதிகாவின் வீட்டில் அவள் அப்பா டாக்டர் செந்தில்நாதன் கட்டளை. அப்போது அன்று நடந்தவை பற்றியெல்லாம் பேசி கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வார்கள். ராதிகா தான் செய்த தவறுகளை முதலில் ஒளிக்காமல் சொல்லிவிடுவாள். தந்தை அவளைத் திருத்தி ஊக்குவிப்பார்.

டாக்டர் செந்தில்நாதனுக்குக் கலைகளிலும் இலக்கியத்திலும் ஈடுபாடு அதிகம். அமரர்

பெற்றோருடன் ராதிகா



கல்கி எழுதிய 'கள்வனின் காதலி'யை நாடக உருவில் அரங்கேற்றி நடித்துமிருக்கிறார். எனவே மகளையும் தமிழ் இலக்கியத்திலும் பரதநாட்டியத்திலும் பற்றுதல் கொள்ளச் செய்ததில் வியப்பில்லை.

''மிகக் கடினமான பாடங்களைக் கூட அலுத்துக் கொள்ளாமல் எப்படிப் படிக்கிறாய்?'' என்று ஒரு தடவை கேட்டேன். ''சிரமமான காரியத்தில் வெற்றி காண்பதில் தானே இன்பம் இருக்கிறது? கஷ்டம் என்று நினைக்காமல் புரிந்து கொள்ள முயல்வதில் சுவை உண்டு'' என்றாள். சீனியர் மாணவர்களுக்கான மருத்துவ சர்ச்சைகளுக்குக் கூடப் போய்விடுவாள். புரியாதவற்றை உரியவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளத் தயங்க மாட்டாள்.

ராதிகாவின் எதிர்காலம் பற்றிக் கேட்டால் பெற்றோர் சம்மதத்துடன் ஒரு டாக்டரையே திருமணம் செய்துகொள்ள ஆசை என்றும் சொந்தத்தில் சின்னதாக ஒரு நர்ஸிங் ஹோம் ஆரம்பித்து அதன் வளர்ச்சிக்கும் சமுதாய நலனுக்கும் பாடுபட வேண்டும் என்றும் சொல்கிறாள்.

கட்டுரை வடிவம்: கிகி

மேலட்டை வண்ணப்படம்: சுபா



## கருணாநிதி விரும்பாத கைராசி!

கருணாநிதி ஒரு பாத்திரக் கடையைத் திறந்து வைத்தார். அந்தக் கடையில் வியாபாரம் நன்றாக நடக்கிறது என்றால் கருணாநிதி ஒரு கைராசிக்காரர் என்பது சொல்லாமலே விளங்கும். கருணாநிதி ஒரு தொழிற்சாலையைத் திறந்து வைத்தார். அந்தத் தொழிற்சாலை நூற்றுக் கணக்கானோருக்கு வேலை வாய்ப்பளிக்கிறது. உற்பத்தித் திறன் நாளுக்கு நாள் பெருகுகிறது என்றால் கருணாநிதி ஒரு கைராசிக்காரர் என்பது விளங்கும்.

ஆனால் கருணாநிதி ஒரு மருத்துவ மனையைத் திறந்து வைத்தார். அதில் மக்கள் கூட்டம் எப்பொழுதும் நிரம்பி வழிகிறது. என்றால் என்ன அர்த்தம்? எனது உடன்பிறப்புக்கள் நோய்வாய்ப் பட்டு அல்லலுறுகின்றார்கள் என்று தானே அர்த்தம்? மருத்துவ மனைத் திறப்பு விழாவினைப் பொறுத்தவரையில் நான்கைராசி இல்லாதவனாகவே இருக்க விரும்புகிறேன்!

சேலம் சண்முகா மருத்துவமனைத் திறப்பு விழாவின்போது டாக்டர் கலைஞர் ஆற்றிய உரையிலிருந்து தொகுத்தவர்:

தன. அனந்த பத்மநாபன்
இயந்திரவியல் இரண்டாம் ஆண்டு
தந்தை பெரியார் ஈ.வெ.ரா. தொழில்நுட்பக் கல்லூரி. வேலூர்

என் அண்ணன் தான் அனுப்பும் தபால் உறைகளின் மேல் பகுதியில் வழக்கமாய் வரையும் சித்திரங்களும், அதற்கான சொற்றொடர்களும் புதுமையாகவும் சிந்தனையைத் தூண்டுவதாகவும் உள்ளன.

வாழ்வின் மேடு பள்ளங்கள் சகஜம்: ஆனால் சமுதாயத்தில் அவற்றைச் சமன்படுத்த உனக்கொரு பங்குண்டு.

ஒவ்வொரு பிரச்னையும் மற்றதிலிருந்து பொதுவிலும் உருவத்திலும் மாறுபடுகிறது. தீர்வுகளும் அப்படியே.

பிரச்னைகளை எதிர்நோக்கு: நீ அவற்றை விடப் பெரியவன்.

ஒளியைத் தா. குழல் விளக்குக்கு நேரமாகிறது. ஆனால் அதன் ஒளி பிரகாசமானது. இருமுறை சிந்தியுங்கள். காலம் அதிகமானால் கவலை வேண்டாம். விளைவுகள் ஒளிமயமாக இருக்கும்.

வேறுபட்ட நிறங்களின் சேர்க்கை தான் வான வில்லின் அழகுக்குக் காரணம். ஓ! நிறவெறியுள்ள மனிதனே! சற்றுச் சிந்தியுங்கள்.

—பு. சித்ரலேகா
III Bsc Chemistry
நிர்மலா பெண்கள் கல்லூரி கோவை





# தமிழ் நாட்டின் முதல் பாங்க்

✻ தமிழ் நாட்டில் முதன்முதலில் துவங்கப் பட்ட பாங்க் எது?

✻ வ.உ.சி. கப்பல் ஓட்டக் கடனுதவி அளித்த நிறுவனத்தின் பெயர் என்ன?

✻ முதன் முதலில் பாரதியார் பாடல்களைப் பிரசுரித்தது யார்? அதற்கு வேண்டிய பொருள் உதவி அளித்தது எந்த ஸ்தாபனம்?

இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் சின்னச் சின்னதாய், விறுவிறுவென்று அங்கும் இங்குமாய், வங்கிகள் முளைக்கின்றன. நாலைந்து வருடங்கள் நன்றாக நடந்து வேர் பிடிக்கிற சமயத்தில் உலக யுத்தம் ஏற்பட்டு, மொத்தத்தையும் தலை கீழாகக் கவிழ்த்துப் போடுகின்றது. 1913லிருந்து 1932 வரை 481 வங்கிகள் 'மூழ்கி'ப் போகின்றன. இத்தனை அமளியிலும் அசையாமல் நிற்கிறது ஒரு பாங்க்.

வெள்ளைக்காரனை வெளியே விரட்டவேண்டும் என்று பலமுனைத் தாக்குதல் நடக்கிறது. அரசியல் ரீதியான இயக்கங்கள் அமைத்துப் போராடுகிறார்கள். வ. உ. சி., சுப்ரமண்ய சிவா போன்றவர்கள் ஆயுதப் புரட்சிதான் சரி என்று, வாஞ்சிநாதன், வ. வே. சு. அய்யர், நீலகண்ட பிரம்மசாரி போன்றவர்கள், குற்றால மலைக் காட்டில் ஒளிந்திருந்து ரகசியத் திட்டங்கள் போடுகிறார்கள். மக்களுடைய ஆதரவு இல்லாமல் எதையும் செய்ய முடியாது. மக்களைத் திரட்டுவது முக்கியம் என்ற பேனாவை எடுத்துக்கொண்டு கிளம்புகிறார் பாரதி. இத்தனைக்கும் நடுவில் வேறு ஒரு கோணத்தில் சிந்திக்கிறார்கள், சில திருநெல்வேலிக்காரர்கள். பிரிட்டிஷ்காரன் இந்தியாவுக்கு வந்தது வியாபாரம் பண்ண. தொடர்ந்து ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருப்பது, அரசியல் லாபத்துக்காக என்பதை விட, தங்கள் பொருட்களுக்கான சந்தை என்ற பொருளாதாரக் காரணத்திற்காக. பிரிட்டிஷ்காரனின் அரசியல் ஆதிக்கத்தை முறியடிக்க வேண்டுமானால் அவன் பொருளாதாரத்தின் மீது வைத்திருக்கும் பிடிப்பைத் தளர்த்த வேண்டும். அதற்கு இங்கு தொழில் ஏற்பட்டு வளர வேண்டும். அந்த முயற்சிக்குப் பணம் வேண்டும். அதற்கு முதற் படியாக ஒரு பாங்கு வேண்டும். திருநெல்வேலி வழக்கறிஞர் திரு பி. கே. ராமய்யர் அறுபது பேர்களைச் சேர்த்துக் கொண்டு ஒரு பாங்க் ஆரம்பிக்கிறார். அது அன்றைக்கு ஒரு புதிய சிந்தனை.

'பாங்க்' என்ற அமைப்புகள் அப்போது இடையாது. தனிப்பட்டவர்களின் லேவாதேவி மட்டும்தான் இருந்து வருகிற காலம் அது. அந்தச் சூழ்நிலையில், தமிழ் நாட்டின் முதல் பாங்க், இந்தியாவின் இரண்டாவது பாங்க் (இந்தியாவின் முதல் பாங்க், பஞ்சாப் நேஷனல் பாங்க் – 1894) சௌத் இந்தியா பாங்க் லிமிடெட் என்ற பெயரில் திருநெல்வேலியில் ஏற்படுகிறது. அவர்கள், வெள்ளைக்காரர்களின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்ள நேரும் என்று தெரிந்தும், வ.உ.சி.க்கு கப்பல் ஓட்டக் கடன் கொடுக்கிறார்கள், தேசோபகாரிஷத் என்ற பெயரில், திருநெல்வேலி அம்மன் சன்னதியில் கடை நடத்தும் பரலி சு. நெல்லையப்பர் வெளியிடும் பாரதியின் பாடல்கள் தடை செய்யப்படக் கூடும் என்று தெரிந்தும், அதற்குப் பொருளுதவி செய்கிறார்கள். இங்கிலீஷ் பிரிப்பரேட்டரி ஸ்கூல் என்று வெள்ளைக்காரர்களால் நடத்தப் படும் அமைப்பு, இந்துக் கல்லூரி என்ற

○ பாங்க் ஸ்தாபகரின் புதல்வருக்கு நினைவுப் பரிசினை திரு. க. ராசாராம் அளிக்கிறார்.



பெயரில் சுதேசிக் கஸ்தூரியாக மாற உதவி செய்கிறார்கள். வங்க வீரர் விபின் சந்திர பாலர் கைதானதை யொட்டி அரசாங்கத்திற்கு எதிராக ஏற்படும் மக்கள் எழுச்சியின் விளைவாகத் தீக்கிரையான அரசாங்கக் கட்டடத்தைத் திருநெல்வேலியில் துணிந்து விலைக்கு வாங்குகிறார்கள்.

இத்தனையும், வங்கித் தொழில் என்பது லேவாதேவியாக மட்டுமே கருதப்பட்ட காலத்தில், சமூகப் பணிகளுக்கு வங்கிகள் உதவியாகவேண்டும் என்ற அரசாங்க நிர்ப்பந்தங்கள் ஏதும் இல்லாத நாட்களில் செய்கிறார்கள்.

அதெல்லாம் சரி, பழைய கதையெல்லாம் வேண்டாம். இப்போது அந்த பாங்க் எப்படி இருக்கிறது?

பாங்க் ஆஃப் தமிழ்நாடு என்ற பெயருடன் 90 கிளைகளுடன் 56 கோடி டிபாசிட்டுகளுடன் பெரிய ஆலமரமாக வளர்ந்து இருக்கிறது. 1978ல் இருந்த டிபாசிட்டுகளை நான்கே வருடத்தில் நான்கு மடங்காக அதிகரித்திருக்கிறார்கள். டிபாசிட்டுகளை யார் கேட்டார்கள்? கடன் கொடுப்பார்களா? தகுதியானவர்களுக்குத் தயக்கமில்லாமல் கொடுக்கிறார்கள். சிறுதொழில், விவசாயம், போன்ற முன்னணிப் பிரிவுகளுக்குச் சென்ற வருடம் 35 சதவீதம் கொடுத்திருக்கிறார்கள்.

இந்த வங்கியின் 80வது ஆண்டு விழா சென்ற வாரம் திருநெல்வேலியில் நடந்தது. கேரள கவர்னர் பா. ரா., ராணுவ அமைச்சர் ஆர். வி., சபாநாயகர் ராஜாராம் ஆகியோர் கலந்து கொண்டார்கள்.

விழா மலரில் கொடுக்கப்பட்ட டெபாசிட் – கடன் விபரத்தைப் பார்த்தார் ஆர்.வி. அதை மட்டும் வைத்துக் கொண்டு ஒரு பாங்கை முழுசாக எடை போட முடியுமா? குனிந்து பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் சேர்மன் வி. எஸ். வி. மணியிடம் என்னவோ கேட்கிறார். உடனடியாக இரண்டு நிமிஷத்தில் பாலன்ஸ் ஷீட் வருகிறது. பேலன்ஸ் ஷீட்டை வைத்துக் கொண்டு என்னென்னவோ கணக்குகள் போடுகிறார், பழைய நிதியமைச்சர் ஆர். வி. அவர் பேச எழுந்ததும் கூறிய முதல் வாசகம் 'ரிசர்வ் பாங்கின் எல்லா சோதனைகளையும் இந்த வங்கி சுலபமாக ஜெயிக்கும்.' வசிஷ்டர் வாயால் பிரம்மரிஷிப் பட்டம் பெற்ற பாங்க் ஆப் தமிழ் நாட்டிற்கு எமது வாழ்த்துக்கள்!

-மாலன்

## எந்த வர்ணனை யாருடையது? போட்டி முடிவு

சரியான விடை:

1. புஷ்பா தங்கதுரை
2. சுஜாதா
3. சிவசங்கரி
4. சாண்டில்யன்
5. இந்துமதி

ஜமாய்த்து விட்டார்கள், கல்கி வாசகர்கள். மொத்தம் 442 சரியான விடைகள் வந்திருந்தன. "அடேயப்பா! எழுத்தாளர்களை இவ்வளவு தூரம் கச்சிதமாக அளந்தும் எடை போட்டும் வைத்திருக்கிறார்களே!" என்று வியந்து போகிறோம். சரியான விடை எழுதியவர்களுள் பின்வரும் பத்துப்பேர் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ. 300 பரிசினைப் பகிர்ந்து கொள்கிறார்கள்.

1. திருமதி லக்ஷ்மி ராமஸ்வாமி,
   மாதம்காரியம்
   மாவிடுகுறிச்சி போஸ்டு
   பேராவூரணி
   தஞ்சை மா.வ.
2. சுவாமி வேலுமார்,
   மருந்தாளுனர்
   ஃபேக்டரி டிஸ்பென்ஸரி,
   பார்ன் அன்டு கம்பெனி,
   சேலம்-636.005.
3. பி. ஆர். ராமு,
   6, சீனுவாசா காலனி,
   குரமங்கலம்,
   சேலம்-636.005.
4. வி. மாலதி,
   உதவியாளர்
   எல். ஐ. வி. ஆஃப் இந்தியா,
   டிவிஷனல் ஆபீஸ்,
   திருச்சி ரோடு,
   கோவை-641.018.
5. எஸ். லலிதா,
   தொண்டி சவரிராயப் பிள்ளை தெரு,
   காரைக்கால்,
   புதுவை மா.வ.
6. திருமதி கிருஷ்ணன்,
   4-51-95, கிஷன் நகர்,
   கரோல்பாக், புதுதில்லி.
7. கே. ரேவதி,
   ஏ-55, ஜாகிர் ஹுசைன் ரோடு,
   பிளாக் 17, நெய்வேலி,-607.801.
8. என். ரவிச்சந்திரன்,
   கல்வெட்டுப்பாளையம்,
   ஊஞ்சலூர் (வழி)
   ஈரோடு ஆர். எம். எஸ்.
   638.152.
9. திருமதி வத்சலா முரளி
   22, முதலாம் குறுக்குத் தெரு,
   மரவனேரி,
   சேலம்-7.
10. டி. எஸ். லெக்ஷ்மி,
    19, நாலாவது மெயின் ரோடு,
    கஸ்தூரிபா நகர்,
    அடையாறு, சென்னை-600.020.


என்ன, தனிச் செடிகளுக்குத் தோப்புலே இடம் கொடுத்திருக்கீங்க?
அது இருந்தா என்ன?.. ஒட்டு மொத்தமா பார்க்கும் போது தோப்பு தோப்பு தான்!
கூட்டு சேரா நாடுகள் இயக்கம்


ராமராவ்


தமிழ்நாடு
15 எதிர்க்கட்சிகள் போராட்டம்

கல்கி

1983 அக்டோபர் 9
ருத்ரோத்காரி புரட்டாசி 23
மலர் : 42 இதழ் : 10



# உலக அரங்கில் பாரதப் பிரதமர்

"பாகிஸ்தான் அணுகுண்டு தயாரித்தாலும் இந்தியா தயாரிக்காது" என்று பகிரங்கமாக அறிவித்த பிரதமரை வாழ்த்துகிறோம். எதிராளியிடம் அணு ஆயுதங்கள் குவிகின்றனவே என்று பயந்து தானும் செய்து அடுக்கும்போதுதான் உலகனைத்தையுமே ஆபத்து சூழ்கிறது. எதிராளி அணு ஆயுதங்களை ஒழிக்காவிட்டாலும் சரி, நாம் ஒழிப்போம் என என்றைக்கு ஒரு வல்லரசு தைரியமாக முன் வருகிறதோ அன்றுதான் உலகுக்கு விமோசனம்.

பாரதப் பிரதமர் என்ற முறையிலும் கூட்டுச் சேரா இயக்கத்தின் தலைவர் என்ற முறையிலும் அமெரிக்கா சென்ற பிரதமர், ஐ.நா.சபையின் 38–வது கூட்டத் தொடரில் பேசும்போது அணு ஆயுதக் குவிப்பின் அபாயங்களை எடுத்துரைத்து அவற்றின் சோதனைகளுக்கும் உற்பத்திக்கும் தடை விதிக்குமாறு வல்லரசுகளைக் கேட்டுக் கொண்டார். பிறருக்கு உபதேசம் செய்யும்போது நாம் அந்த உபதேசப்படி நடந்து காட்டுவது மிக முக்கியமல்லவா? எனவே 'என்னவானாலும் சரி இந்தியா அணுகுண்டு தயாரிக்காது' என்ற பிரதமரின் உறுதிமொழி இரட்டிப்பு மகிழ்ச்சி அளிக்கிறது. "ஒரே சமயத்தில் ஓராயிரம் ஹிரோஷிமாக்கள் என்ற நிலையைச் சற்று எண்ணிப் பாருங்கள்! உலகில் ஒளிய இடமில்லை; ஒளிவதற்கு யாரும் இல்லவும் இல்லை என்ற நிலையைச் சிந்தித்துப் பாருங்கள்" என்று பிரதமர் கேட்டுக் கொண்டது உருக்கமாக இருந்தது.

பிறநாடுகளின் விவகாரங்களில் நேரடியாகத் தலையிடாமலும் பலாத்காரத்தைப் பயன்படுத்தாமலுமே, மேற்கு ஆசிய, மத்திய அமெரிக்க, ஆப்கானிஸ்தானப் பிரச்னைகளுக்கு அமைதியான முறையில் தீர்வு காண முடியும் என்று பிரதமர் நம்பிக்கை தெரிவித்தானது கூட்டுச் சேரா இயக்கத்தின் குரலை உலக அரங்கில் ஓங்கி ஒலித்ததாகவே விளங்கியது.

பிரதமர் தமது பேச்சில் வேறு பல விஷயங்களைக் குறித்துக் கருத்துக்கள் தெரிவித்துள்ள போதிலும் செல்வச் செழிப்பு மிக்க நாடுகள் ஏழை நாடுகளுக்கு உதவ வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியதே மூன்றுவது முக்கிய அம்சமாகத் திகழ்ந்தது. ஐ. நா. சபையிலேயே நடந்த, பல நாட்டுத் தலைவர்களின் உச்சகட்ட மாநாட்டுக்குத் தலைமை தாங்கும் அரிய பெருமையும் நமது பிரதமருக்கு வாய்த்தது. பாரதக் குடிமகன் ஒவ்வொருவனையும் பூரிப்படையச் செய்த இந்த நிகழ்ச்சியின் போதும் பிரதமர் வடக்கு – தெற்கு நாடுகளிடையே நிலவ வேண்டிய பொருளாதார ஒத்துழைப்பு பற்றியே அதிகமாகப் பேசியிருக்கிறார். "ஆசிய, ஆப்பிரிக்க, தென்(லாட்டின்) அமெரிக்க நாடுகளின் தொழில் வளப் பெருக்கத்துக்கு உதவுவதென்பது பிச்சை போடுவதாகாது; பணக்கார நாடுகளின் பொருளாதாரம் மேலும் பலப்படவும் இந்த நடவடிக்கை உதவும்" என்ற பிரதமரின் கருத்து நூற்றுக்கு நூறு உண்மையானது. ஆனால் இவ்வளவு புத்திசாலித்தனமாக அங்கு பேசிய பிரதமர், செல்வம் மிக்க நாடுகள் இந்தியாவின் தொழிலபிவிருத்திக்கு உதவ முடியாமல் தடுக்கும் நமது அரசின் பொருளாதாரக் கொள்கைகளைச் செப்பனிடாமலிருப்பதுதான் விசனத்தை அளிக்கிறது.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# வளர் ஒளி நாதரும் ஒளி தரும் நாயகியும்

○ வடிவுடையம்மை

ஆனந்தி

> வயிரவ மூர்த்தியின் பயங்கரத் தோற்றத்தை எண்ணிச் சற்று அச்சத்துடனேயே கண்களை நிமிர்த்திப் பார்த்தால் ''என்னைக்கண்டா அஞ்சுகிறாய்?'' என்று சிரித்துக் கேட்பது போலல்லவா இருக்கிறது!

மக்களுடைய வழிபாட்டில் பைரவ மூர்த்திக்கு ஒரு சிறப்பான இடம் உண்டு. அவர் க்ஷேத்திர பாலர். எல்லா ஊர்களிலும் பைரவ மூர்த்தி காவல் தெய்வமாக விளங்குகிறார். நன்றி உணர்ச்சி மிக்க நாய் அவருடன் உலாவுகிறது.

ஒரு காலத்தில் ஐந்து சிரத்துடன் விளங்கிய பிரும்ம தேவர் மிகவும் கர்வமடைந்தார். அன்பே வடிவமான சிவபெருமானுக்கு அகந்தை மட்டும் அறவே பிடிக்காது. பிரும்மாவை அடக்க நினைத்தார். அந்த நினைவே உக்கிரமான வடிவெடுத்து நின்றது. ''படைப்புக் கடவுளைக் கத்தியினால் பூஜை செய்வாயாக'' என்று ஆணையிட்டார் ஈசன். பைரவர் பிரும்மாவின் ஒரு தலையைத் துணித்ததும் காத்தல் கடவுளான விஷ்ணுமூர்த்தி குறுக்கிட்டுத் தம் மகனை மன்னிக்கும்படி வேண்டினார். ஈசன் மனம் இரங்கி நான்முகனை மன்னித்து விட்டார்.

அசுரர்கள் இழைத்த துன்பங்களைப் பொறுக்கமுடியாமல்தேவர்கள்தவித்தார்கள். அதைக் கண்டு இரங்கிய பிரகதாரணன் என்ற மாமுனிவர் பூவுலகில் புண்ணிய பூமியான காசியில் வந்து ருத்ர யாகம் செய்தார். யாக குண்டத்திலிருந்து பைரவ மூர்த்தி சிறு பாலகனாகத் தோன்றினார். வடு என்றால் சிறுவன். அதனால் பைரவருக்கு வடுகநாதன் என்னும் பெயர் உண்டு. நான்கு வேதங்களும் நாயின் வடிவம் எடுத்து அவருக்கு வாகனமாயின. தேவர்களின் பகைவர்களை யெல்லாம் வென்று பயங்கரமாகச் சத்தமிட்டுக்கொண்டு எல்லோரும் கலங்கும் வண்ணம் நடனமாடினார். பீதி தரும் ஒலியை எழுப்பியதால் பைரவர் என்று பெயர் பெற்றார். பயங்கரத் தோற்றமுடையவரானாலும் காத்தல் கடவுளாகவே விளங்குகிறார். பைரவ மூர்த்தி குடிகொண்டுள்ள கோவில்களில் அவருக்கே கடைசி பூஜை நடைபெறும்.

காரைக்குடிக்கு அருகில் உள்ளது வயிரவன் பட்டி. இந்த ஊரை எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வரவேந்திர ராசனென்னும் பாண்டிய மன்னன் நகரத்தார் பெருமக்களுக்கு உரிமையாக்கியதாகச் செப்பேடுகள் கூறுகின்றன.

ஆதவன் தன் அருள்கிரணங்களால் எல்லா உயிர்களுக்கும் புத்துயிர் தரும் நேரம். மெல்ல ஒளி பரவுகிறது. வயிரவன் கோவிலை நெருங்கும்போதே மணியோசையும், நாகஸ்வர இசையும் கேட்கிறது. திருவனந்தல் நடக்கிறதோ?

சுவாமி சந்நிதியில் தீபாராதனை செய்து விபூதி வழங்குகிறார். வளரொளிநாதருக்கு ஒளியை நாம் காட்டவேண்டியதில்லைதான். நமது அந்தகாரத்தை ஒருகணம் மறந்து ஒளிப்பிழம்பில் மனமொன்றி நிற்கிறோம்.



சூரபதுமனும் தம்பிகளும் செய்த கொடுமைகள் தாங்க முடியாமல் முறையிட்ட தேவர்களைப் பார்த்து ஈசுவரன் ''அழிஞ்சில் வனம் என்ற இடத்துக்குச் சென்று எம்மைப் பூஜித்து வந்தால் உங்கள் துயர் தீரும்'' என்று அருளவே தேவர்கள் இந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். மாலறியா நான்முகனும் காணுமலையாகப் பேரொளி வடிவமாக நின்ற ஈசுவரனே இங்கு கோவில் கொண்டுள்ளார்என்றுகண்டுகொண்டார்கள். வளரொளி நாதரையும் வடிவுடையம்மையையும் பணிந்து தொழுதார்கள். அவர்களுக்குச் சிவ

பெருமான் கால்களில் சிலம்பும், தலை மாலையும் அணிந்து, சூலம், மழு,பாசம், உடுக்கை முதலியவற்றைத் தரித்து, நீலவண்ணனும் முக்கண்ணனும், செஞ்சடையனும் வயிரவ மூர்த்தியாய்க் காட்சி கொடுத்தார். வயிரவன் கோவில் அவருடைய இதயஸ்தானமாக விளங்குகிறது.

தலவிருட்சம் ஏறழிஞ்சில் மரம். இந்த ஊரில் காய்க்கும் நெல்லிக்காயைத் தின்று ஊருணி நீரைக் குடித்தால் நாய்க் கடி விஷம் உடனே இறங்கிவிடும் என்பது பக்தர்களுடைய நம்பிக்கை. நம்பிக்கை அற்புதங்களைச் சாதிக்கவல்லது.

வயிரவ மூர்த்தியின் சந்நிதி. சற்று அச்சத்துடனேயே கண்களைத் தயக்கத்துடன் நிமிர்த்திப் பார்க்கிறோம். என்ன விந்தை! விழித்து நோக்கும் கண்களும், மேலே நோக்கிச் சிலிர்த்த கேசமும், கோரைப் பற்களும் பயங்கரமான ஆயுதங்களும் காணப்பட்டாலும் வட்ட வடிவமான திருவாசியின் மத்தியில் மனம் கவரும் தோற்றத்துடனேயே திகழ்கிறார். சுருண்ட வாலுடன் சுவானம் அருகே நிற்கிறது.

நாவுக்கரசு சுவாமிகள் திருச்சேறைக் கோவிலில் பாடிய காலபைரவரைப் பற்றிய பாடலின் விளக்கமாகவே திகழ்கிறார்.

''விரித்தபல் கதிர்கொள் சூலம்
 வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால
 பைரவ னாகி வேழம்
உரித்துமை அஞ்சக் கண்டு
 ஒண்திரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச்
 செந்நெறிச் செல்வ னாரே!''

ஒளிக் கதிர் வீசுகின்ற சூலம் தாங்கி வெடிபடும் டமருகத்தையும் கையில் தரித்துக் கொண்டு கால பைரவ வடிவம் கொண்டு யானை உரிப் போர்வையுடன் காட்சியளித்த ஈசுவரனைப் பார்த்து உமையவள் பயந்து நீங்கவே, ''என்னைக் கண்டா அஞ்சுகிறாய்?''

○ பைரவர் மூலவர்



○ கண்ணுந்தான் கோவில்



என்று கேட்பது போல் மணிவாய் விரியச் சிரித்து அருள் புரிந்தாராம் சிவபெருமான்.

கருணை வடிவமான வடிவுடையம்மன். அம்மையின் அழகுத் தோற்றம் ''என்ன பொருத்தமான பெயர்!'' என்று நம்மை மகிழச் செய்கிறது. எல்லாச் செல்வங்களும் நிரம்பிய தேவி. அழகையும் செல்வமாகப் பெற்றவள். கருணையை விட அழகு எது?

ஞாலமெலாம் வாழத் தம் முதுகெலும் பினை ஈந்த தியாகச் சுடரான ததீசி முனிவர் இங்கு வந்து வழிபட்டாராம். அது ஒன்றே போதும் தலப் பெருமைக்கு. சந்திரன் இந்திரன், சுக்கிரன் முதலியோரும் வழி பட்ட தலம்.

கோபுர வாயிலும் நிலைப்படியும் சிற்பக் கோலங்களுடன் மிளிர்கின்றன. தூணுக்குத் தூண் அழகிய சிற்பங்கள். தம்புராவை மீட்டிச் சுருதி சேர்த்துக் கொண்டு ஒய்யார மாக நிற்கும் கின்னர ஸ்திரீ ஒரு தூணில். மற்றொரு தூணில் கண்ணப்பரின் கரம் பற்றிக் காக்கும் குடுமித் தேவர். கூப்பிய கரங்களுடன் அடியார்கள். திருப்பணி செய்த வர்களுடைய சிலைகள்.

ஒரு சிறந்த தலத்தில் நன்றாகப் பரிபாலிக் கப்பட்டு வரும் கோவிலைக் கண்ட திருப்தி உள்ளத்தில் நிலவுகிறது.

⊖ ⊖ ⊖

**வை**ரவன் பட்டியிலிருந்து காரையார் கோவில் போகும் வழியில் நாட்டரசன் கோட்டையில் இருக்கிறது கண்ணாத்தாள் கோவில்.

கோவில் எதிரே பெரிய திருக்குளம். தண் ணீர்குறைவாகவேஇருந்தாலும்உண்ணீராகப் பயனுவதைக் கண்டோம். குளத்தில் நீர் நிறைந்திருக்கும் காலத்தில் சமுத்திரம் போல் தோன்றும்.

குளக்கரையை யொட்டிப் பெரிய மண்ட பம். அப்பாடா! எவ்வளவு பெரிய தூண்கள்! நான்கு தூண்கள் சேர்ந்தது போன்ற கன பரிமாணத்துடன் உயரே நீண்ட போதிகைகளுடன் காட்சி யளிக்கிறது.

ஊதுவத்திப் புகையின் நறுமணம், நெய் விளக்கு எரியும் புகை வாசனை, இனிப்புப் பண்டங்கள், வாழைப் பழ மணம், எல்லாவற்றையும் தூக்கி யடித்துக்கொண்டு மலர் மாலைகளின் மணம். புஷ்ப ஆரங்கள் சூடிய அம்மன் திருவுருவம் விளக்குகளின் ஒளியில் மங்கலாகத் தெரிகிறது. மெள்ள மெள்ள நகர்ந்து அன்னையின் அருகில் வந்து விட்டோம். கண் மலர் சாத்தப்பட்டுள்ள திருமுக மண்டலம், சூலம் தாங்கிய கரங்கள், பற்பல ஆபரணங்கள் சூடிய திருமேனி. கம்பீரமாக நேர்கொண்ட பார்வையுடன் தரிசனம் தருகிறாள், கண்ணுடைய நாயகி.

சென்னையிலிருந்து இரண்டு பெண்கள் இங்கே வந்திருந்து நாற்பது நாட்கள் விரத மிருந்து கண் பார்வை பெற்றார்களாம். நம்பிக்கை நிகழ்த்தும் அற்புதம்!

பக்தர்கள் கண்மலர் சாத்துகிறார்கள். புடவை சாத்துகிறார்கள். அர்ச்சனை செய்து மணம் கமழும் மலர், சந்தனம், குங்குமம் எல்லாம் தருகிறார் அர்ச்சகர்.

வணிகர் குலத்தில் ஒரு ரத்தினமாகத் தோன்றி தெய்வமாக உயர்ந்த கண்ணகியின் கோவில் இதுவென்று கூறினார்கள். நாளா வட்டத்தில் கற்புத் தெய்வமான கண்ணகி மக்கள் நாவில் கண்ணாத்தாளாக மாறிக்கண் கொடுக்கும்தெய்வமாகவழிபடப்பெறுகிறாள். மதுரை மாநகரைத் தன் கற்புத் திறத்தால் எரியூட்டிய கண்ணகி ஒளி தரும் தெய்வமாக வழிபடப் படுவதில் அதிசயமில்லை.

சிலப்பதிகார காலத்துச் சதுக்கப் பூதத்தை நினைவுபடுத்துவது போல் இந்த ஊரில் பூதக்குடித் தெரு ஒன்று இருக்கிறது.

ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி
ஓம்சக்தி என்றுரை செய்திடுவோம்,
ஓம் சக்தி என்பவர் உண்மை கண்டார் சுடர்
ஒண்மை கொண்டார், உயிர் வண்மை
கொண்டார்!
—பாரதியார்

புகைப்படங்கள்:
**மணியம் செல்வன், எம். மாதவன்**

## அருள்வாக்கு

பிறருக்கு உபகாரம் செய்வதற்கே நமது சரீரம் ஏற்பட்டிருக்கிறது. என்பது ஆன்றோர் மொழி. 'பரோபகாரம் இதம் சரீரம்' என்பார்கள். தேகத்தில் நல்ல தெம்பு இருக்கிறபோதே பிற ருக்காக நன்றாக உழைக்க உடலில் சக்தி இருக்கிறபோதே, யுவர்கள் சேவை நெறி யில் ஈடுபட வேண்டும். பிறருக்குச் செய்வதற்காககவே தேக பலத்தை நன்கு காத்துக் கொள்ள வேண்டும். தேக பலத்தை விட ஒழுக்க பலம் முக் கியம். நமது மதம் கூறுகிற சாஸ்திர தர்ம நெறியின்படி சுத்தமான வாழ்வு வாழ வேண்டும். இப்படி நாம் தூய்மை யாக இருந்தால்தான் பிறருக்கு நல்ல முறையில் சேவை செய்ய முடியும். காமக் குரோதாதிகள் இருந்தால் எப் படி நல்ல முறையில் சேவை செய்வது?

சமூக சேவை உண்மையாக இருக்க வேண்டுமானால் சேவை செய்கிறவர் களுக்கு தர்மத்திலும் சத்தியத்திலும் தளராத பிடிப்பு இருக்க வேண்டும். அவர்களுக்கு பயம் என்பதே கூடாது. பயமற்ற நிலை வேறு; ஹிம்சை வழியில் நடப்பது வேறு. இரண்டையும் குழப் பிக்கொள்ளக் கூடாது. யுவர்களுக்கெல் லாம் உதாரணமாக இருப்பவர் ஆஞ்ச நேய சுவாமி.

- ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்



● மிருதங்கச் சக்கரவர்த்தி சுசீந்திரம் சுப்பையா பிள்ளையும், அவர் பிள்ளையும் தடுக்கிலும் கோலத்திலும் எப்படிப் புகுந்து வந்து ஒருவரை ஒருவர் ஜெயிக்கப் பார்க்கிறார்கள் என்பதை இடைவேளைக்கப்புறம் காட்டுவதற்கு முன்னால், சுப்பையா பிள்ளையின் 'ஓஹோ' என்று வாழ்ந்த வாழ்க்கையையும், 'ஓ' என்று வீழ்ந்த நிலையையும் அழகாய் விஸ்தாரமாய்க் காட்டிவிடுகிறார்கள்.

கை விரல்களைப் புண்ணாக்கிக் கொண்டு கோயில் மண்டபத்தில் தோய்ந்து உட்கார்ந்திருக்கிற கணவன், அவர் மனத்தைப் புண்ணாக்கிவிட்டு வேகமாய் வெளியேறுகிற மகன் இவர்களுக்கிடையில் அகப்பட்டு இரண்டு பக்கமும் இடிபடுகிறபோது அந்தக் கதறல், அந்தத் துடிப்பு, அந்தக் கோபம் — விஜயாவுக்கு மட்டும்தான் வருமோ?

பிரபு மிருதங்க இளவல். காதலில் மூழ்கி, கற்பனையில் ராஜ கம்பீரத்துடன் காலெடுத்து வைத்து கையை வீசி வருகிற இடம் — அப்படியே அசலின் அபாரமான நகல். மற்றபடி அலட்டல் இல்லாத நடிப்பு.

கலக்ஷணா — இளமையாய் ஒரு முகம் வேண்டுமே என்று நினைத்து இணைக்கப்பட்ட சரக்குப் பெட்டி. ஒரு கவர்ச்சியுமில்லாமல் கடந்து போகிறார்.

சிவாஜியை மிருதங்கம் வாசிக்காமல் திருத்தச் சூழ்ச்சி செய்கிற நீடாமங்கலம் நீலகண்ட பாகவதராய் — நம்பியாரை விட்டால் இவ்வளவு அழகாகச் செய்ய ஆள் ஏது?

## மிருதங்க சக்கரவர்த்தி





## அண்ணே!

ஒத்து ஊதும் ராஜரத்தினம் பிள்ளையாய் வி. கே. ஆர்., அவரின் மனைவியாய் மனோரமா. விரசமில்லாத ரசமான ஆரவாரம். ஓரத்தில் 'தேங்காயும்' உண்டு.

சரித்திரம் திரும்புகிற எம்.எஸ்.வி. சக்கைப் போடு போடுகிறார். பெருங்காய டப்பா இன்னும் காலியாகவில்லை.

உமையாள்புரம் சிவராமனின் உச்சகட்ட மிருதங்கம் மனசை ஆணி அடித்து நிறுத்துகிறது.

ஒத்துழைக்காத கை, வாயில் ரத்தம் என்று பச்சாதாபங்களை யாசிக்காமல், சக்கரவர்த்தி போட்டியில் வெற்றி பெற்றிருந்தால், இன்னும் பெருமையாய் இருந்திருக்கும்.

மிருதங்கச் சக்கரவர்த்தியாய் நடிப்புச் சக்கரவர்த்தி சிவாஜி செய்திருப்பதை இப்படி சிறப்பிடம் தந்து தான் குறிப்பிடவேண்டும். அந்த முகத்தில் — கண்கள், புருவங்கள், உதட்டுச் சுழிப்புகள், நெற்றிச் சுருக்கங்கள் என்று அத்தனையும் போட்டி போட்டுக்கொண்டு காட்டும் நூறு நூறு பாவங்கள் என்ன! ஆரம்ப கம்பீரமும், பின்னால் அடிபட்ட சோர்வுமாய் நடை போடுகிற வித்தை என்ன!

இந்த அற்புதக் கலைஞன் நம் மிடையில் இருப்பதற்கு ஒவ்வொரு தமிழனும் கட்டாயம் கர்வப்பட வேண்டும்.



# அண்ணே!

பாட்டாளி வர்க்கத்தைக் கைக்குள் போட்டுக் கொண்டு தட்டி வேலை வாங்குவது எப்படி என்ற முதலாளியின் சாமர்த்தியங்களையும் சங்கடங்களையும் நகைச் சுவையோடு அளந்திருக்கிறார்கள் என்பது பாயிண்ட் நம்பர் ஒன்.

ஆள் மாறாட்டங்களை வைத்துக் கொண்டு காமெடி படங்கள் வந்து விட்டன. ஆனாலும் மௌலியின் பார்வையே வேறு. மெத்தைக்கு ஏங்கும் ஏழை இளைஞனும், கட்டாந்தரைக்காக ஏங்கும் பணக்காரனும் தத்தம் குடும்பத்திற்கு அடுத்தவரை அனுப்ப அங்கு பழைய கதையே தொடர்வது அட்டகாசமான கற்பனை — இது பாயிண்ட் நம்பர் டூ.

இருந்தும் கூட — மௌலி கதாநாயகன். அவரது கொழு கொழு முகமும், உருண்டைக் கண்களும் படத்தின் சீரியஸ் காட்சிகளில் பெரிய வீக் பாயிண்ட். சுமித்ரா கன கச்சிதம்.

வி. கே. ஆர். இரைச்சலும், வனிதா ராமகிருஷ்ணனின் மோதல்களும் காமெடியுமில்லாமல், சீரியஸுமாயில்லாத வேதனைகள். விஜியும் பாஸ்கரும் என்ன செய்கிறார்கள் என்றே புரியவில்லை.

இளையராஜாவின் வாசிப்பு இதில் இளைத்துப் போயிருக்கிறது.

'சிரி, சிந்தி' பாணியில் படம் எடுத்திருக்கிறார் மௌலி. (போஸ்டர்களில் போட்டுக் கொள்வது) பச்சைக் குதிரை தாண்டுவதையும், கமர்கட் சாப்பிடுவதையும் சுவரேறிக் குதித்து 'சந்திரலேகா' போவதையும் சிந்திக்க முடியும் என்று தோன்றவில்லை.

இந்த மாதிரி ஒட்டாத நகைச் சுவைக் காட்சிகளில் என்னவோ ஒரு வாசனை-மோப்பம் பிடித்தால் தெரிந்தது நாடக வாசனையென்று.

ஆகட்டும், பார்க்கலாம்.

உடுப்பு மாட்டின இன்ஸ்பெக்டர்! குற்றவாளியைப் பிடித்துச் சட்டத்தின் முன் நிறுத்துகிறார். சாட்சி இல்லை என்று கோர்ட் அவனை விடுவித்து விடுகிறது. இனி—உடுப்பு மாட்டாமல் அதே இன்ஸ்பெக்டர். திட்டமிட்டுச் சமூகத்தின் களைகளைத் தம் இஷ்டப்படி குதறித் தீர்த்துக் கட்டுகிறார் — சாட்சி ஏதும் வைத்துக்கொள்ளாமல். அவ்வளவு தான் கதை. நிறைய இங்கிலீஷ் வாசனை.

ரொம்ப நாளைக்கப்புறம் ருத்ரோத்காரி வருஷத்தில் ருத்ர விஜய்காந்த். சண்டைக் காட்சிகளில் பொறி பறக்கிறது. அவர் காதலித்து, பாத்ரூமில் முதுகு தடவிக் கல்யாணம் செய்து கொள்கிற பெண்ணாய் விஜி: காலண்டர்களுக்குப் போஸ் கொடுப்பதோடு இவர் நிறுத்திக் கொள்ளலாம்.

வேட்டைக்கார அப்பாவாய் நம்பியார் கச்சிதம். சங்கர் கணேஷ் ஏரோப்ளேன் ஓட்டுகிறார்கள்.

வில்லன்களைத் தனித் தனியே மூட்டைப் பூச்சியாய் நசுக்குகிற உத்திகளில், வழிமுறைகளில் எத்தனை தினுசு! வன்முறை, ரத்தம், ஒலி என்று அடுக்குகிறார்கள். கோர்ட்டில் சாட்சி சொன்ன சிறுவன் இன்ஸ்பெக்டர் வீட்டில் தூக்கில் தொங்குகிற இடம் திக்! மொட்டை வில்லனை மரத்தோடு கட்டிப் போட்டு, சுற்றி அகழி வெட்டி, பெட்ரோல் கொளுத்தி, பாம்பையும் அவன் மேல் போடுகிற இடம் திடுக்!

சிறுக்கு அதிஜாக்கிரதையாய் இருக்க வேண்டிய காலம் வந்துவிட்டது. அனுராதா ஆட்டத்தின் அத்துமீறல்கள் அப்படி!

சுறுசுறு படம். -ஜெயமன்மதன்

# சாட்சி



# ரகசிய நோய் பற்றிய பகிரங்க உண்மைகள்

**பாலுறவு நோய்களில் பாதிக்கப் படுநோயாளர்களில் மிகப் பெரும் பான்மையினர் 15 வயது முதல் 30 வயதுவரையுள்ள இளைய சமுதாயத் தினரே என்று அறிய மனம் அதிர்ச்சி அடைகிறது.**

நமது நாட்டில் மலேரியா, காச நோய், ஆகியவற்றுக்குப் பிறகு மூன்றாவது பரவலான, பயங்கர நோய் பால்வினை நோய்தான். V. D., STD என்று ஆங்கிலத்தில் சுருக்கி அழைக்கப்படும் இந்நோய் பலவகைப்படும்.

1971ம் ஆண்டில் இரண்டு இலட்சத்திற்கும் மேலானவர்கள் அரசாங்க மருத்துவ மனைகளில் இந்நோய்களுக்கான சிகிச்சை பெற்றார்கள். ஆனால் 1981ம் ஆண்டில் பத்து இலட்சத்துக்கும் அதிகமானவர்கள் இந்நோய்களுக்கான சிகிச்சை பெற்றார்கள். இது நானூறு சதவிகித பெருக்கத்தைக் காட்டுகிறது. நம் நாட்டில் உள்ள நோயாளிகளுள் இருபது சத விகிதத்தினரே அரசாங்க மருத்துவ மனைகளில் இந் நோய்களுக்கான சிகிச்சை பெறுகிறார்கள் என்பதைக் கவனிக்குமிடத்தில் இந்நோய் எந்த அளவுக்குப் பரவியுள்ளது என உணரலாம்.

பம்பாயில் உள்ள பிரபல சிவப்பு விளக்குப் பகுதியான காமாதிபுரத்தில் பத்தாயிரம் பெண்களுக்கும் அதிகமானவர்கள் விபசாரத் தொழில் புரிந்து வருகின்றனர். இவர்கள் மூலம் குறைந்தது ஐம்பதாயிரம் ஆண்களுக்கு இந்நோய்கள் தினமும் பரவும் வாய்ப்பிருக்கிறது.

இந்நோய்களினால் பாதிக்கப்பட்டவர்களுள் மிகப் பெரும்பான்மையானவர்கள் பதினைந்து முதல் முப்பது வயதுள்ள இளைய சமுதாயத்தினரே என்பதை அறியும்போது நமது மனம் அளவிலாத வருத்தமும், அதிர்ச்சியும் அடைகிறது. இந்நோய் கண்டவர்களில் ஆண்கள் 60 சத விகிதம்; பெண்கள் 40 சத விகிதம்.

இந்நோய்கள் வருவதற்கும், மிக எளிதில் பரவுவதற்கும் முக்கிய காரணம் தகாத முறையில் விபசாரிகளுடன் உடலுறவுகொள்வதே. நம் நாட்டில் கீழ்க்கண்ட பால்வினை நோய்கள் பரவியிருக்கின்றன.

1. சிஃபிலிஸ் மிகவும் பயங்கரமானது 40 சதம்.
2. ஷேன்க்ராய்டு 25 சதம்.
3. கோனோரியா 20 சதம்.
4. லிம்போகிரேனுலம் வெனீரியம் 5 சதம்.



5. கிரானுலோமா இன்குவினேட் 4 சதம்.
6. ஹெர்பெஸ்-மேற்கத்திய நாடுகளிலிருந்து இறக்குமதியாகித்தற்போது நம் நாட்டிலும் வேகமாகப் பரவி வருகிறது.

பீகாரில் மட்டும் இந்நோயாளிகளில் 35 சத விகிதத்தினர் 15 வயதிற்குட்பட்ட குழந்தைகளே. ஏனென்றால் இந்நோய்களுடைய தந்தைக்கோ தாய்க்கோ பிறக்கும் குழந்தைகள் இந்நோய்களினால் நிச்சயம் பாதிக்கப் படுவார்கள். பெரியவர்கள் பொறுப்பில்லாமல் செய்தகாரியம் ஒரு பாவமும் அறியாத குழந்தைகளையும் அல்லவா பாதிக்கிறது. இதைவிட மற்றொரு கொடுமை மூட நம்பிக்கை காரணமாக நடைபெற்று வருகிறது. இந் நோய்களால் பாதிக்கப்பட்ட ஆண்கள், குணம் பெறக் கன்னி கழியாத பெண்ணுடன் உறவு கொள்கிறார்கள். இதனால் நான்கு வயதுச் சிறுமிகள் கூடக் கற்பழிக்கப்பட்டு, பலர் இறந்தும் விடுகிறார்கள்.

நமது நாட்டில் இத்தனை லட்சக் கணக்கானவர்களைப் பாதித்திருக்கும் இந்நோய்கள் இதுநாள்வரை சரும வியாதிகளுள் ஒன்றாகவே கருதப்பட்டு வந்திருக்கிறது. இந் நோய்களைக் குணப்படுத்தப் பயிற்சி பெற்ற மருத்துவர்களோ, ஆராய்ச்சியாளர்களோ, மருந்துகளோ மிகவும் குறைவு.

நம் நாட்டிலுள்ள 800க்கும் மேற்பட்ட மாவட்டங்களில் 237 மாவட்டத் தலைநகரங்களில் மட்டுமே இந்நோய்களுக்கான சிகிச்சை அளிக்கக்கூடிய சிறப்பு மருத்துவ மனைகள் இயங்கி வருகின்றன. இவற்றுள் மிகப் பெரும்பான்மையானவை மிக மோசமான

நிலையில், பெயர் அளவில் மட்டுமே செயல்படுகின்றன.

சென்ற ஆண்டு இந்நோய்களைத் தடுக்க, ஒழிக்க, நமது மத்திய அரசு 90 லட்சம் ரூபாய் ஒதுக்கியது. ஆனால் நம் நாட்டிலுள்ள லட்சக் கணக்கான இந்நோயாளிகளைக் குணப்படுத்தக் குறைந்தது 100 கோடி ரூபாயாவது தேவைப்படும். இது நமது மத்திய அரசின் மருத்துவத் துறைக்கான வருடாந்தரச் செலவை விட அதிகமாகும்.

இந்நோய்கள் பெரும்பாலும் முற்றிய பிறகே வெளியே தெரிய வருகிறது. மேலும் வெட்கத்தாலும் ஆண்களும், பெண்களும் தங்களை இந்நோய்கள் பாதித்திருந்தாலும் குணப்படுத்திக் கொள்ள மருத்துவர்களை நாடுவதில்லை. குடும்பப் பெண்கள் கூட கணவனிடமிருந்து இந்த நோய்களைப் பெறும் வாய்ப்பிருக்கிறது. பெண்களுக்கு இந்நோய்க்கான சிகிச்சை அளிக்கக் கூடிய பெண் மருத்துவர்களும் மிகவும் குறைவு.

நமது நாட்டில் தற்சமயம் இந்நோய்கள் மிக வேகமாகப் பெருகி வருவதற்கு முதல் காரணம் சீர்குலைந்த சமுதாயம். விபசாரம் மிக அதிக அளவில் நடைபெற்று வருகிறது. பம்பாய் போன்ற மிகப் பெரிய நகரங்களில் விபசாரம் பெரும் தொழிலாக நடத்தப்படுகிறது. பம்பாய், கல்கத்தா, டில்லி, சென்னை பெங்களூர் போன்ற நகரங்களில் ஆயிரக் கணக்கான பெண்கள் இந்த நோய்களினால் பாதிக்கப்பட்டிருப்பதோடு மிக வேகமாக மற்றவர்களுக்கும் பரப்பி வருகின்றனர்.

காவல் துறையினருக்கும், வேறு அரசு அதிகாரிகளுக்கும் விபசாரிகள் இலஞ்சமாகக் கொடுக்கும் தொகையில் பாதியைத் தங்கள் மருத்துவச் சிகிச்சைக்காகச் செலவழித்தால் போதும். அவர்களது நோய் தீரும். அவர்கள் மூலம் மேன் மேலும் மற்றவர்களுக்குப் பரவாமல் இருக்கும்.

நம் நாட்டில் இந்நோயினால் பாதிக்கப்பட்டவர்களுள் 65 சத விகிதத்திற்கும் அதிகமானவர்கள் பொருளாதார நிலையில் கீழ் மட்டத்தில் இருக்கும் படிப்பறிவில்லாத ஏழை எளியவர்களே.

சமீப காலமாக நமது அரசு குடும்பக் கட்டுப்பாடு பற்றி மிகத் தீவிரமாகப் பிரசாரம் செய்து வருகிறது. அதுபோல் இத்தகைய நோய்கள் வரும் காரணங்களையும், இவற்றின் தீமைகளையும் மக்கள் அறியப் பிரசாரம் செய்ய வேண்டியது மிகவும் அவசியம். என்.எஸ்.எஸ். போன்ற மாணவர்கள் அமைப்புக்கள் கூட இவ்வகையில் அருந்தொண்டாற்றலாம்.

மேல் நிலைப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் செக்ஸ் கல்வி அளிப்பது முக்கியமானது. இதன் மூலம் சினிமா, ஆபாசப் பத்திரிகை இவற்றின் பாதிப்பிலிருந்து இளைஞர்களை மீட்கலாம் என்பதோடு தவறான செக்ஸ் உறவுகளால் ஏற்படக்கூடிய அபாயங்களையும் உணர்த்தலாம்.

காலத்தின் மாற்றங்களால் தோன்றும் பல்வேறு தேவைகளுக்கேற்ப நமது கல்வித் திட்டமும் மாற்றப்பட வேண்டும். நாளைய சமுதாயத்தை இன்றைய தீமைகளிலிருந்து காப்பாற்ற வேண்டியது மிகவும் அவசியம். நாளைய இந்தியா, இன்றைய இளையசமுதாயத்தின் பொறுப்பில்தான் உள்ளது. அவர்கள் முடிந்தவரை உணர்ச்சி பூர்வமாக இல்லாமல் அறிவுபூர்வமாக வாழ வேண்டும். அவர்களது உணர்ச்சி பூர்வமான சில நடவடிக்கைகளால் அவர்களது வாழ்வும், அவர்கள் வாழும் நாட்டின் வளர்ச்சியும் பாதிக்கப்படக் கூடாது.

**பின் குறிப்பு:** சென்ற ஆண்டு மத்திய மருத்துவ மற்றும் சுகாதாரக் கல்வி நிறுவனம் 10 நிமிடங்கள் ஓடும் ஒரு திரைப் படம் எடுத்தது. இதில் ஆண்-பெண் நிர்வாணம், உடல் உறுப்புகள் முதலியவற்றையே அதிகமாகக் காட்டுவதால் மக்களின் நலத்தில் பெரும் அக்கறை கொண்ட, மக்களின் ஏகோபித்த பாராட்டுக்களையும் பெற்ற திரைப் படத் தணிக்கைக் குழுவினர் இத் திரைப் படத்தைத் தடை செய்து விட்டனர். இது எப்படி இருக்கிறது!

ஆதாரம்: **இந்தியா டுடே**

தமிழ் வடிவம்: **இ. ஸ்ரீ. திருவேங்கடம்**
பி. எஸ்ஸி இறுதி ஆண்டு
எஸ். வி. கலைக் கல்லூரி, திருப்பதி

---

வாஷிங்டன் டி. சி.யில் 1962ல் நான்கே வயது நிரம்பிய டோரோதி ஸ்ட்ரெய்ட் என்ற சிறுமி 'உலகம் எப்படி ஆரம்பமானது?' என்ற புத்தகத்தை எழுதினாள். வியாபார ரீதியில் எழுதப்பட்டுப் பிரசுரமான புத்தகங்களில் மிகவும் குறைந்த வயதுச் சிறுமியால் எழுதப்பட்ட புத்தகம் இதுதான். இந்தப் புத்தகத்தை 1964ல் பேந்தியான்புக்ஸ் ஆப் நியூயார்க் என்ற நிறுவனம் வெளியிட்டுள்ளது.

—இரணியல் குமாரசுவாமி
பி. எஸ்ஸி. மாணவர்
அரசினர் கலைக்கல்லூரி
நந்தனம்



# தலைவலி பலவகை உண்டு



# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது—அனாஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி, தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.



சக்தி வாய்ந்த, நம்பகமான
மேனர்ஸ்
அனாஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

* Licensed user of T.M. : Geoffrey Manners & Co.Ltd.

GM-2-83 TM



## 10

குழந்தை சோனியாக இருந்தது. மாநிறமாய், லேசான செம்பட்டை முடியுடனும், நாளைக்கு உயரமாக இருப்பேன் என்று ஜோஸ்யம் கூறும் நீளம் நீளமான கை,' கால் விரல் சளுடனும் இருந்தது.

கௌரி குனிந்து தூங்கிக் கொண்டிருந்த குழந்தையின் கன்னத்தைத் தட்டினாள்.

அது ஒருதரம் சிரித்தது. உதடுகள் துடிக்க விசும்பி, ரேஸில் ஓடுகிற மாதிரி இரைத்துவிட்டுத் தொடர்ந்து உறங்கியது.

''தூக்கிக்கிறீங்களா கௌரி?''

''வேணாம் ம்ருணா... தூங்கிட்டு இருக்கிறதை வீணா எழுப்ப வேணாம்.''

ஒரு நிமிஷம் அப்படியே நின்று கௌரி குழந்தையை உன்னித்தாள்.

தத்து எடுத்துக்கொள்வது என்ற தீர்மானத்துக்கு வந்த பின் கௌரி அந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் ஏழாவது குழந்தை இது. எல்லாம் ஆண் குழந்தைகள்தாம்.

''உங்களைப் போலவே ஒரு பையன் வேணும் பாலா'' என்று விரும்பியது நடக்காவிட்டாலும் கிட்டத்தட்ட பாலாஜியின் சாயல் உள்ள பிள்ளை ஒன்றை தத்து எடுத்துக் கொண்டு பாலாஜியின் பழக்க வழக்கங்களை ஆரம்பத்திலிருந்தே சொல்லிக் கொடுத்துக் குட்டி பாலாஜியாக வளர்த்து மனசில் மண்டிய ஆசையைக் கொஞ்சமாவது நிறைவேற்றிக்கொள்ள எண்ணம்...

ம்ருணாளினி அவளிடம் தேவைகளைக் கேட்டபோது யோசனை பண்ணி நிறுத்தி, நிறுத்திப் பேசினாள்.

1. பிள்ளைக் குழந்தையாக இருப்பது அவசியம்.

2. மாநிறமாக இருந்தாலும், நாளைக்கு உயரமாக வரக்கூடியவன் என்ற நம்பிக்கையைத் தருபவனாக இருக்க வேண்டும்.

3. மூக்கு தீர்க்கமாக அமைந்திருப்பது நல்லது.

4. குழந்தையின் பின்னணி ஓரளவுக்காவது தெரிய வேண்டும். வியாதி உள்ள குடும்பம், துர்க்குணம் கொண்ட பெற்றோர் இவர்களைத் தவிர்க்க இந்த விவரம் உதவும்.

5. தத்துக் கொடுத்த பின் நான் உறவு என்று சொல்லிக் கொண்டு யாரும் எட்டிக் கூடப் பார்க்கக் கூடாது...

இன்னும்....

ம்ருணாளினியிடம் போட்ட பட்டியலைக் கேட்டுப் பாலாஜி சிரித்தான்.

''என்னம்மா இது! குழந்தை தத்து எடுத்துக்கப் போறியா, இல்லே மேட் டு ஆர்டர் ஒரு குழந்தையை உண்டாக்கப் போறியா?''

கௌரி அவன் கேலியை லட்சியம் பண்ணவில்லை. புருவங்களைச் சுருக்கிக் கொண்டு நிதானமாய்ப் பதிலளித்தாள்.

''நூத்தியெட்டு கண்டிஷன்ஸ் கேக்கறது நிஜம்தான் பாலா...நான் இல்லேன்னு சொல்லலை...இப்படிப் பார்த்துப்பார்த்துப் பொறுக்கினுக் கொஞ்சமாவது உங்களை மாதிரி பிள்ளை அமைவானேன்னு நப்பாசை. லெட் மீ ட்ரை. முயற்சி பண்றதிலே தப்பில்லையே. முடிஞ்சா பாப்போம்... இல்லேன்னு ஒண்ணு ரெண்டை விட்டுக் கொடுத்துத்தான் ஆகணும்...''

ம்ருணாளினியிடம் பொறுப்பைத் தந்த இருபதாம் நாள் குழந்தையைப் பார்த்தாள்.

பிறந்து எட்டு நாட்களே ஆன சிசு.

சிகப்பு: தலை கொள்ளாமல் முடி. நன்கு வளர்ந்து பிறந்ததற்குச் சாட்சியாக முதிர்ந்த நகங்கள்.

அன்றைக்கு பாலாஜியும் கௌரியுடன் அனாதை இல்லத்துக்கு வந்திருந்தான்.

குழந்தையைப் பார்த்துவிட்டு வாசலுக்குக் கௌரியுடன் வருகையில், கலைந்துபோன ஆண் ஒருவன் வாயில் துண்டை வைத்துக் கொண்டு • ஓரமாய் நிற்க, ''இவர்தான் அந்தக் குழந்தையோட தகப்பன்'' என்று ம்ருணாளினி அறிமுகம் செய்து வைத்தாள்.

''நீங்க அவனைத் தத்து எடுத்துக்க விரும்பறதாச் சொன்னாங்க... சந்தோஷம்... எங்கயாவது அவன் நல்லா இருந்தாச் சரி...பாவி! பிள்ளை வேணும் அத்தான்னு எப்பப் பாரு புலம்பிக்கிட்டே இருந்தா. முகத்தைக் கூடப்

பார்க்காமப் போய்ச் சேர்ந்திட்டா... இனி இவன் என்ன ஆனாலும் எனக்குக் கவலையில்லே. அவனே போயிட்டப்புறம் இவன் என்ன ஆனா எனக்கு என்ன? எங்கேயாவது ஆயுசோட இருந்தாச் சரி... என் தங்கம் இவனாலதானே என்னை விட்டுப் பிரிஞ்சா? அதனால இவனும் எனக்கு வேணாம். எங்க வேணா எடுத்துக்கிட்டுப் போய், எப்படிவேணா வளருங்க... எனக்கு அக்கறை இல்லே...பாவி பின்னே பிறந்தா 'கோகுல கிருஷ்ணன்'னு பேர் வைக்க, 'கோகுல்னு கூப்பிடணும்'னு சொல்லிட்டு இருந்தா... அந்தப் பேரை இவனுக்கு நீங்க வைச்சீங்கன்னா நான் சந்தோஷப்படுவேன். மத்தபடி இவன் எங்கேயாவது நல்லா இருந்தாச் சரி. அவளே போயிட்டா... இனி இவன் மட்டும் எனக்கு எதுக்கு?... அவ...."

சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டு மூலையோடு மூலையாய் அவன் நிற்க, "நாங்க வரோம். அப்புறம் பேசிக்கலாம்" என்று பாலாஜி கௌரியுடன் கிளம்பி விட்டான்.

போகும் வழியில் கௌரி மௌனமாய் வர "என்னம்மா?" என்றான் மெதுவாய்.

"அந்த மனுஷனோட வேதனையை நினைச்சா கஷ்டமா இருக்கு பாலா... ஐம் ஸாரி ஃபார் ஹிம்."

"குழந்தையைப் பத்தி நீ என்ன நினைக்கிறே?"

"எனக்குப் பிடிச்சிருக்கு... ஆனாலும்..."

"ஆனாலும்?"—

"சொல்லத் தெரியலே பாலா... என்னமோ தயக்கமா இருக்கு."

"நா சொல்லட்டுமா? அந்தத் தகப்பனால குழந்தையைப் பிரிஞ்சு நிச்சயமா இருக்க முடியாதுன்றது உனக்குப் புரியறதாலதான் இந்தத் தயக்கம்... அவன் அடிபட்டுப் போயிருக்கான். அந்த அதிர்ச்சி கொடுத்திருக்கிற வெறுப்புக்கு ஆளாகிப் பேசறான். அதான் ஒரு க்ஷணம் குழந்தை என்னவானாலும் கவலையில்லேன்றான்; மறு க்ஷணம் கோகுல் கிருஷ்ணன்னு பேர் வையுங்கன்னு கெஞ்சறான். இந்தக் குழந்தை அவனுக்கு வேணும். கொஞ்ச நாள்ல மனசு தேறினப்புறம் 'இவனைப் பிரிஞ்சு என்னால இருக்க முடியலே: எனக்குத் திருப்பித் தந்துடுங்க'ன்னு நம்மகிட்ட வந்து அழுவான். வேணாம் கௌரி... ஒரு அப்பாவையும் பிள்ளையையும் பிரிச்ச பாவம் நமக்கு எதுக்கு; என்னம்மா?"

அதற்கப்புறம் பார்த்த குழந்தைகள் அவளுக்குத் திருப்தி உண்டாக்கவில்லை.

இந்த மாசங்களாகத் தேடுகிறோம். இன்னும் மனசுக்குப் பிடித்ததாக ஒன்று கூட அமையவில்லையே!

ஒருவேளை பாலாஜி துவக்கத்தில் கூறியது போல் என் எதிர்பார்ப்பு அதிகமோ?

எப்பேர்ப்பட்ட குழந்தையானாலும் ஆரோக்கியமாக இருந்தால் போதும் என்ற திருப்தியுடன் அதற்கு மேல் தாண்டித் தாவாமல் இருந்துவிட வேண்டுமோ?

குழப்பம் அதிகமானதும், ஒரு நாள் இரவு பாலாஜியிடமும் இது பற்றிப் பேசினாள்.

"ரத்த சம்பந்தமில்லாத குழந்தையிடம் ஒட்டுதல் ஏற்படுமா, பாலா?"

"ஏன் சாத்தியமில்லே கௌரி? நமக்குனு ஒண்ணு எடுத்து வளர்க்கத் துவங்கிட்டா தானா பாசம் வந்துடும்னே நான் நினைக்கிறேன். மனுஷ ஜாதிக்குச் சம்பந்தமே இல்லாத நாய், மாடு, பூனை மேல உசிரையே வைச்சிருக்கிறவங்களை நீ பார்த்திருக்கப்போ இந்தச் சந்தேகம் உனக்கு வர்றது எனக்கு ஆச்சரியமா இருக்கு. விருப்பு, வெறுப்பு எல்லாத்துக்கும் மனசுதான் காரணம். அதுக்கு மஞ்சக் கண்ணாடி மாட்டாம புழுக்கம் இல்லாம, காத்தோட்டமா வைச்சுக்கிட்டா எல்லாமே சாத்தியம்தான்."

பாலாஜியின் இந்தப் பேச்சுக்குப் பிறகு தன் சிந்தனை மெதுவாக வேறு பாதையில் செல்ல முற்படுவதைக் கௌரி உணரவே செய்தாள். அடுத்து வந்த மாதங்களில் ஏதோ ஓர் உந்துதல் காரணமாய், சென்னையில் உள்ள அத்தனை இல்லங்களுக்கும் எந்த ஓர் உள் நோக்கமும் இல்லாமல் சென்று வந்தாள்.

இன்று பார்ப்பது இந்தப் பத்து மாசத்தில் ஏழாவது குழந்தை.

இன்னொரு தரம் குனிந்து குழந்தையின் கன்னத்தில் மென்மையாக முத்தமிட்ட நிமிஷத்தில் தான் என்ன செய்ய வேண்டும் என்பது தெளிவாகிவிட, மென்மையாய்ப் புன்னகைத்துக் கொண்டே நிமிர்ந்தாள்.

"என்ன கௌரி, தீர்மானம் பண்ணிட்டீங்களா? அதான் இந்த சந்தோஷமா?"

கௌரி பல் தெரியச் சிரித்தாள்.

"நிஜம்தான். தீர்மானம் பண்ணிட்டேன் மிருணா."

"வெரி குட்... டாக்டர் கிட்டப் பேசிடுறீங்களா?"

"கண்டிப்பா... இன்னிக்கு ராத்திரியே."

---

பையன்: அம்மா, என் கையிலே குத்தியிருந்த முள்ளைப் பின்னாலே எடுத்து விட்டேன்.

அம்மா: பின்னினாலா? அது ஆபத்தாச்சே! உனக்குத் தெரியாதா?

பையன்: இல்லேம்மா; நான் சேஃப்டி பின்னினால்தானே எடுத்தேன்?

—சி. லொ
3வது ஆண்டு இரசாயன இயல்,
ஏ. எம். ஜெயின் கல்லூரி
சென்னை-600 061.



''ரொம்ப சந்தோஷம் கௌரி... கிட்டத் தட்ட ஒரு வருஷமா அலைஞ்ச அலைச்சல் வீண் போகலை....''

''நிச்சயமாய் இல்லை... தாங்க்ஸ்.....'' ஸ்டெல்லியின் கையைப் பற்றின கௌரி தொடர்ந்து. ''இந்த பால பவன்ல ஒரு குழந்தையைச் சம்ரட்சிக்க மாசம் என்ன செலவாகுதுன்னு சொன்னீங்க?'' என்று கேட்டாள்.

ஏன் இப்போது இந்தக் கேள்வி என்று சற்றே மருளினி ஆச்சரியப்பட்டாள்.

''நாத்தி அம்பது ரூபா...''

''இதுக்குள்ள சாப்பாடு, உடை, மருந்து, படிப்பு எல்லாம் அடங்கிடுமா?''

''ஜெர்மனிலேந்து ஒரு குழந்தைக்கு மாசம் நூறு ரூபாய் வருது... அதோட இந்தப் பணத்தையும் சேர்த்துச் சமாளிக்கிறோம்.''

''ம்ம்....''

**யோ**சனை மாறாமல் வீட்டுக்கு வந்த கௌரி ரொம்ப நேரத்துக்குப் பேப்பர் பென் சிலை வைத்து என்னென்னவோ கணக்குகளைப் போட்டுப் பார்த்துவிட்டு, இரவு எப்போது வரும் என்று காத்திருந்து, சாப்பிட்டு, பாலாஜி படுக்க வந்ததும் பேச்சை எடுத் தாள்.

''இன்னிக்கு நான் பால பவனத்துக்குப் போயிருந்ததைப் பத்தி நீங்க கேட்கவேயில் லியே பாலா.''

''நீயா எதுவும் சொல்லாததுலேந்து உனக் குக் குழந்தை பிடிக்கலேன்னு நினைச்சேன். லோ, வீணா நாம கிளறுவானேன்னு பேசாம இருந்திட்டேன்.''

கௌரி அவன் அருகில் நகர்ந்து உட் கார்ந்து கொண்டாள்.

''முன்னே ஒரு தரம் நான் உங்க கிட்ட எந் தக் குழந்தை கிட்டயும் பூரணமான அன்பைச் செலுத்தறது சாத்தியமான்னு கேட்டதும், அதுக்கு நீங்க மனுஷ சம்பந்தமே இல்லாத பிராணிகள் மேலே கூட ஆத்மார்த்த அன் பைச் செலுத்தறப்போ, இது ஏன் முடி யாதுன்னு கேட்டதும் ஞாபகம் இருக்கா?''

''ம்.''

''அன்னிலேந்தே நான் வேற விதமா யோசனை பண்ண ஆரம்பிச்சேன் பாலா... நீங்க சொன்ன மாதிரி மனசைக் காத் தோட்டமா வைச்சுக்க முயற்சி பண்ணி னேன்; பரந்த நோக்கோட என்னைச் சுத்திப் பார்க்க ஆசைப்பட்டேன்.''

''நீ என்னிக்குமே அப்படிப்பட்டவள் தானே கௌரி... இது என்ன புதுசா....''

''இருங்க பாலா... ப்ளீஸ், நான்சொல் லறதைப் பூரா கேளுங்க... ஓ. கே.? சராசரி பெண்ணை விட எனக்குப் பரந்த கண்ணோட் டம் அதிகமாயிருக்கலாம்; நான் மறுக்கலே. ஆனா அன்னிக்கு உங்க கிட்டப் பேசினப் பறம் இது விஷயமா இன்னும் தீவிரமா அலசிப் பண்ணினதுல, பல சமாசாரங்களைப் புதுசா என்னால உணர முடிஞ்சுது பாலா... காரணமே இல்லாம ஒரு கேள்வி எனக்குள்ள உண்டாச்சு. எனக்குன்னு ஒரு குழந்தை



ஒருவர்: ஏம்ப்பா நன்றி சொல்வதற்குக் கூட இவ்வளவு நேரமா??
மற்றவர்: பின்ன ஆகாதுங்களா? மனத் தின் ஆழத்திலிருந்து வரவேண்டாம்?

—ஆர். அரவிந்தன்

பி. ராஜன் பி. ஈ. 5ஆம் ஆண்டு
அரசினர் தொழில் நுணுக்கக் கல்லூரி
கோவை

பிறந்தாலும், இல்லே, எனக்குன்னு தத்து எடுத்துக்கிட்டாலும் அதும்பேர்ல உசிரை வைக்கிறதோட, நம்ம சொத்துக்கள் எல் லாத்தையும் அந்தக் குழந்தையோட நலனுக் காகத் தானே சேர்த்து வைப்போம், செல வழிப்போம் என்ற கேள்வி என்னை ரொம்ப உறுத்தத் துவங்கிச்சு பாலா....''

''இதுல உறுத்தல் எதுக்கும்மா? இல் இல் த நேச்சுரல் ஃபீலிங்...''

''கடவுள் நமக்கு ஏதோ காரணத்தால குழந்தை வேணாம்னு தீர்மானிச்சிருக்கிறதை நாம ஏன் மாத்த முயற்சிசெய்யணும் பாலா? ஓரளவு வசதியையும் கொடுத்திட்டு, எல்லா பெத்தவங்களையும் போல, என் பிள்ளை, அவன் எதிர்காலம், அவனுக்குச் சொத் துன்னு இருக்காதீங்கன்னு அவர் விதிச்சிருக் கிறதை ஏன் மாத்த நினைக்கணும் பாலா?''

''மேலே சொல்லு....''

''நம்ம சந்தோஷம்தான் முக்கியம்னு ஒரு பிள்ளையைத் தத்து எடுத்துக்கிட்டு, சொத்து, பணம், காசெல்லாம் அவன் ஒருத்தனுக்குத்தான்னு நாம வாழறதைவிட பத்துப் பேரைப் படிக்க வைச்சு, பத்துப் பேருக்கு வைத்தியம் பார்த்து, எல்லாக் குழந்தைகளையும் நம்மளுதா நினைச்சுட்டா பா....லா.....நா....நா என்ன சொல் றேன்னு புரியுதா?''

புரிந்தது.

உணர்ச்சிவசப்பட்டுப்போனதில் மொட்டு மொட்டாக வியர்வைத் துளிகள் வெடிக்க, உதடுகள் துடிக்கப் பேசியவளைச் சட்டென்று இழுத்து முரட்டுத்தனமாய் அணைக்கையில் பாலாஜிக்கு ரொம்ப சந்தோஷமாக இருந் தது.

(தொடரும்)




கரூர் நகரிலுள்ள வங்கியின் புதிய
மத்திய அலுவலகக் கட்டிடம்

# இதுவே கரூர் வைஸ்யா வங்கியின் சமீபகால வரலாற்றின் சுருக்கமாகும்.

எமது நிறுவனம், அறுபதாண்டுகளுக்கும் முன்பு, சிறியதொரு வங்கியாக ஆரம்பிக்கப்பட்டது. எமது ஸ்தாபகர்களின் முற்போக்கு நோக்கு மற்றும் வாடிக்கையாளர் நம்பிக்கையின் பலனாக நாங்கள் தொடர்ந்து நிலையாக வளர்ச்சியடைந்து வந்துள்ளோம்; இன்று நாட்டின் முக்கிய-மானதொரு வங்கியாக விளங்குகிறோம்.

இன்று எமக்கு தென்மண்டலமெங்கும் கிளைகள் உள்ளன. மேலும் நாட்டின் முக்கிய நகரங்களிலும் எமது கிளைகள் மக்களுக்கு சிறந்த முறையில் சேவை புரிந்து வருகின்றன. இவை, பயிற்சிபெற்ற ஊழியர்கள் மற்றும் முதிர்ச்சியடைந்த எமது தொழில் திறன்கள் உறுதுணையுடன், முழுமையான வங்கிச் சேவையை வழங்குகின்றன.

எதிர்காலத்திற்கான எமது திட்டங்களின்கீழ் எமது சேவைக்கான ஆதார-வசதிகளை வலுவாக்கியும், நவீன தொழில்நுணுக்க உத்திகளை மேற்கொண்டும், எமது நடவடிக்கைகளை புதிய துறைகளுக்கு விஸ்தரித்தும் வருகிறோம். எமது வங்கி, அன்னியச் செலாவணியில் வர்த்தகம் புரிய அங்கீகரிக்கப்பட்டது; அனைத்து நாட்டு கரன்சிகள் மற்றும் எல்லா வகை செலாவணி சம்பந்தப்பட்ட வியாபாரத்தை மேற்கொள்ள ''யூனிவர்சல் லைசன்ஸ்'' அனுமதியை நாங்கள் பெற்றுள்ளோம்.

எமது புதிய மத்திய அலுவலகக் கட்டிடம் எமது இன்றைய உயர் அந்தஸ்திற்கு சின்னமாக விளங்குகிறது. அதுமட்டுமல்லாது, நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்தில் மேலும் மேலும் பெரும் பங்கேற்க வேண்டும் என்ற எமது வருங்காலத்திற்கான இலட்சியத்தையும் அது பிரதிபலிக்கிறது.

## கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்

பதிவு & மத்திய அலுவலகம் : கரூர் 639 002

*அன்னியச் செலாவணியில் வர்த்தகம் புரிய அங்கீகாரம் பெற்றவர்கள்*

சேர்மன் : G. வெங்கடேசம்

CO.M83.24 Tm.

கே. பொன்ராஜன்
இறுதியாண்டு (இயந்திரவியல்)
அரசினர் பொறியியற் கல்லூரி
கோவை

அழைப்பு மணி ஒலித்தது.

சில் எட்ட இருந்த பட்டன்களை இயக்கினான். திரையில் யோக் தெரிந்தது. கையில் நிறைய பொட்டலங்கள். இன்று யோக் வரும் என்பதையே மறந்திருந்தான்.

''யோக்.... நான் என்னென்ன ஆர்டர் செய்திருந்தேன்?''

சில வினாடிகளில் ஒரு நீண்ட பட்டியல் தெரிவிக்கப்பட்டது.

''சரி ராஜூவைச் சரிபார்த்து வாங்கச் சொல்.'' சொல்லிவிட்டுப் படுக்கையில் சாய்ந்துகொண்டான். ரோபோராஜூ சப்தமின்றிப் போனது.

''பில் 630 ரூபாய்.'' இரண்டு தரம் எண்ணிக் கொடுத்தான். பிடிக்கவில்லை. திருப்தியில்லை. கையிலிருந்து பிடுங்கினான். யோக் நின்றது. மகா கஞ்சன். இரண்டு நிமிடம் கழித்துக் கொடுத்தான்.

''ராஜூ 200 மில்லி காப்பி வேண்டும்.'' சப்தமிட்டான்.

போரடித்தது. ''டேர்... இன்னைக்கு ஏதாவது நல்ல புரோகிராம் இருக்கா?''

''எஸ் சார். விஜியில் ஒரு லேடீஸ் புரோக்கிராம்.''

''எத்தனை மணிக்கு? எத்தனை மணிக்கு?'' ஆர்வம் மேலோங்கியது.

''செவன் தெர்ட்டிக்கு சார்.''

ஏழு பதினைந்து ஆகியிருந்தது. ராஜூ காப்பி கொண்டு வந்தது.

கி. பி. 2238-ல் ரோபாட்டும், கம்ப்யூட்டரும் இவ்வளவு உதவியாக்கப்பட்டிருந்தன. நிறைய மாற்றங்கள். அரசியலும் கூட. மனித மனங்களிலும் கூட.

எப்படியோ ஏழு முப்பது. இன்று திரையை 100 சி. எம். ஆகப் பெரிதாக்கி வைத்தான்.

இது ஒரு தனியார் டீ. வி. ஒலிபரப்பு.

பெண்கள் ஆடினர். பாடினர். எத்தனை மாற்றங்கள் ஏற்பட்டும் இவை மாறவில்லை. அழகாக... அழகாக... இருந்தனர்.

மனக் குதிரை பாய்ந்தது. தனி வாழ்க்கை போரடித்தது. துணை தேவையாகத் தோன்றியது. ஸ்பரிசம்... அன்பு... எல்லாம் வேண்டுமென்று நினைத்தான்.

டீ.வி.யைப் பார்...க்கவே முடியவில்லை. அவசரம் .... அவசரமாகத் தோன்றியது. யோசிக்கவில்லை. — முடியவுமில்லை!

''டேர்...! என் Personal use Computer நான் கல்யாணம் செஞ்சுக்கணும்.'' நன்றாக அமர்ந்து கொண்டான்.

உடனே ''Matrimonial Service Computer உடன் தொடர்புகொள்'' என்றது டேர்.

சில நொடிகள்... MSC கிடைத்தது.

''MSC நான் கல்யாணம் செஞ்சுக்கணும்''

''குட். கோட் நெம்பர் சொல்லுங்கள்.''

''CP 8342 Crime Police''

பொறுத்தான். ''.38'' விநாடிகள். உடனே அவனுடைய முழு உருவம் திரையில் பிரகாசித்து.

''இது நீங்கள்தானே?''

''எஸ்... எஸ்.... நானேதான்'' அவசரமாகப் பதிலளித்தான்.

—''சரி. உங்களைப் பற்றிச் சொல்லுங்கள்.''

''MSC உனக்கு என்ன வேண்டும் கேள்.''

''சரி. பெயர், படிப்பு, வயது, உயரம், எடை......''

''சில், PPS, 29.32, 163 52 பாட்டுவரும், ஹாக்கி,....''

— 'சரி. கொஞ்ச நேரம் பொறுங்கள்.''

ராஜூ சிகரெட் கொண்டுவந்து கொடுத்தது. டீ. வி.யை மறுபடியும் போட்டான். அணைத்தான்.

''சில்... சில்....'' — குரல் கொஞ்சம் கொஞ்சமாகக் கூடியது. ஓடிவந்தான்.

''வந்துவிட்டேன்''

''திரையில் பார்க்கவும்.''

பார்த்தான்.

பட்டுப் புடவை. லிப்ஸ்டிக். கொஞ்சம் மூக்கு பெரிது.



''நெக்ஸ்ட்'' என்றான் வெறுப்புடன்.
அடுத்தது முகம் சரியில்லை.
அடுத்தது குண்டு.
''Next, Next, Next''– கோபமும் வெறுப்பும். கடைசியில் திரை காலி.
''MSC என்ன ஆச்சு?''
''அவ்வளவுதான்.''
''என்ன அவ்வளவுதான்?'' கண்கள் சிவக்கக் கத்...தினான்.

''உங்கள் தகுதிக்கும், ஸ்டேண்டர்டுக்கும் இவர்கள்தான் கிடைப்பார்கள்.''

''என்னது...என்னுடைய தகுதியில் என்ன குறைச்சல்?'' அவனுக்கு அழுகையே வந்தது.
''குறையில்லை. அதிகமாக இருக்கிறது.''
''சரி. அதிகமா இருந்தா என்ன? எல்லாம் நான் அட்ஜஸ்ட் பண்ணிக்கிறேன்.''
''அதெல்லாம் முடியாது.''
''ஏன்... ஏன் முடியாது...?''
''சட்டம். தகுதிக்கு மீறியோ, குறைந்தோ கல்யாணம் செய்து கொள்வதால்தான் பிரச்னைகள் வருகின்றன.''

''MSC பிளீஸ்... எனக்கு ஒரு வழி சொல்லேன். சட்டம்...என்ன சட்டம்...வெங்காயச் சட்டம். நான் கல்யாணம் செஞ்சுக்கணும். அழகா... நாட்டியம் தெரிஞ்ச மாதிரி... பிளீஸ் MSC'' பிதற்றினான்.
''ஸாரி.... ஸாரி...''
''இதுக்கு வேறே வழியே கிடையாதா?''
58 வினாடிகள் பொறுத்து– ''உங்கள் மனத்தை மாற்றிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.''
தொடர்பறுந்தது.
சோர்வுடன் சாய்ந்து விழுந்தான்.
சட்டத்தைத் தூற்றியதற்காகச் சிறிது நேரத்தில் அவனைப் போலீஸ் கைது செய்து கொண்டு போனது.



## அத்தியாயம் 39

"இதெல்லாம் யாரும் தாங்கமாட்டா காயத்ரி உன் பேச்சு எடுபடற நேரம் இல்லே. இது. நிஜமான கவலே இவா யாருக்கும் கிடையாது. எதிர்காலம் பத்தி வெராளம் யோசிக்கத் தெரியாது. வாழைப் பழம் தின்னுட்டுத் தெருவுல தோலி போட்டுப் போறவன்தானம்மா இவாள்ளாம். அடுத்த தலைமுறைக்கு ஒரு மரம் கூட நடாத மனுஷர்கள். ஒரு புஸ்தகம்கூடப் போடாத ஜனங்கள். உன் கவலே சிரிப் பாயிடும் காயத்ரி."

மாம்பலம் ஸ்டேஷன் — அப்பாவும் பெண்ணும் உட்கார்ந்திருந்தார்கள்.

"இதோ பார், நான் நெறைய பட்டிருக்கேன். ஆயிரத்து தொள்ளாயிரத்து முப்பத்திரண்டோ, முப்பத்தி மூணுலயோ — இப்ப வேண்டாம். இன்னும் கொஞ்ச நாட்கள் பொறுத்துச் சுதந்திரம் வாங்கலாம்னு ஒரு காங்கிரஸ் மீட்டிங்கில் பேசினேன். கழுத்தைப் பிடிச்சு மேடையிலேர்ந்து தள்ளிட்டான். ஜனமெல்லாம் சிரிச்சுது. பன்னாடைன்னு திட்டித்து. வெத்தலை பாக்குக் கூட வாங்க விடாம ஊர் ஜனம் ஒதுக்கி வச்சுது. ரொம்ப குழம்பினேன். பேசினது தப்போன்னு நெனைச்சேன். சுதந்திரம் கெடைச்ச ரெண்டேவருஷத்துல அடடா சரியாத்தான் பேசியிருக்கோம்னு தோணித்து.

"விஸ்வநாதன் மாதிரி பேர் உன்னைப் புரிஞ்சுப்பான்னு நெனைச்சது கூட தப்பு. கவிதை எழுதறது கதை எழுதறது எல்லாம் உலக அக்கறையிலும் வர்றதில்லேம்மா. நெறைய பேருக்குத் தான் பேருக்கு முன்னாடி வெறும் இனிஷியல் போறலை. ஒரு டைட்டில் வேணும். அதோ பார்ன்னு அடையாளம் காட்டணும். கவிஞர் கதைஞர்னு போட்டுக்கணும். நடிகனைப் பார்த்துக் கிராப்பு, மீசை வச்சுக்கற மாதிரி யாராவது எழுதினதைப் படிச்சுட்டுத் தானும் எழுத ஆசைப்படறா.

"ஒரு தமாஷ் தெரியுமா காயத்ரி. வாலிபமா இருக்கறச்சே ஒழுக்கம் பத்தித்தான் ரொம்பப் பேசுவோம். கடைசி வரை பிரம்மச்சாரியா இருக்கணும்னு நெனைச்சப்போம். சாமியாராப் போறத்துக்கு ஆசைப்படுவோம். எங்க ஊர் பையன் ஒருத்தன் ஹிமாச்சலம் ஓடிட்டான். அந்த ஊர் பையன் பத்ராச்சலம் ஓடிட்டான்னும் பெருமையா பேசுவோம். ஓடிப் போனவனை நெனைச்சுப் பொறாமைப்படுவோம். நமக்கு ஓடறதுக்குத் தைரியம் இல்லையேன்னு வேதனைப்படுவோம். அப்ப ஓடினவனெல்லாம் இப்பகை நெறைய சம்பாதிச்சுப் பேரன் பேத்தியோட இருக்கான். எதுக்கு சொல்றேன். ஒவ்வொரு கால கட்டத்துல ஒவ்வொரு சிந்தனை — இளமையா இருக்கறவாளை அலைக்கழிக்கிறது. கல்லோ மண்ணோ எனக்குப் புருஷன்னு ஒருத்தன் கிடைக்கமாட்டானான்னு போன குழந்தைகள் ஏங்கின காலம் ஒன்று உண்டு. இன்னிக்குப் புருஷனே வேண்டாம்னு நெனைக்கற காலம் துளிர்விட்டிருக்கு."

"விஸ்வநாதன் இட்ட நீ கேட்டது தப்பேயில்லே காயத்ரி." நாணு ஐயர் மெல்ல திரும்பித் தம் பெண்ணைப் பார்த்தார்.

காயத்ரி முகம் கல்லாயிருந்தது.

"என்னம்மா இன்னும் வருத்தமா இருக்கா. தோத்துப் போய்ட்ட மனநிலை ஜாஸ்தியாறதா, என்ன குழப்பம், உனக்குள்ள சொல்லு. நான் உதவி பண்ண முடியுமா சொல்லு."

காயத்ரி மெல்ல திரும்பினாள். "உன்னுடைய வாழ்க்கை கூட சிரமமா இருக்குப்பா. உன்னையும் விட்டு நகர்ந்துடணும்னு தோணறது. உன் நிழல் கூட இல்லாம தனியா இருக்கணும்னு தோணறது. என்னைத் தேடிண்டு இருட்ல இன்னிக்கு நீ ஓடி வந்தது சிரமமா இருக்குப்பா."

நாணு ஐயர் ஒருகணம் உள்ளே துவண்டார். பெரியாழ்வாரின் வேதனை மனசுள் புரண்டது.

ஒரு மகள் தன்னை உடையேன் உலகம்
நிறைந்த புகழால்
திருமகள் போல் வளர்த்தேன் செங்கண்
மால்தான் கொண்டுபோனான்.

ஆண்டாள் குடித்தனம் செய்தாளா குழந்தைகள் பெற்றாளா? சோறு ஊட்டி வளர்த்துப் பள்ளிக்கு அனுப்பினாளா? இந்த வருஷம் கார்த்திகைக்குக் கூடப் பத்து ரூபாய் சீர் அனுப்பு என்று கடுதாசி எழுதினாளா? ஸ்ரீரங்கம் போனதும் காணாமல் போய்விட்டாள். எங்கேயோ ஓர் ஒளிப் பிழம்பில் ஐக்கியமாகி விட்டாள். சட்டென்று பெரியாழ்வார் வாழ்க்கையிலிருந்து உயிரோடு உடலோடு மறைந்து விட்டாள். எத்தனை தவிப்பு தவித்திருக்கும் அந்தப் பெரியாழ்வார் நெஞ்சு? பெத்த நெஞ்சு எவ்வளவு வேதனைப்பட்டிருக்கும்? அப்படிச் சட்டென்று

அவள்: நேத்தைய பார்ட்டியிலே, உன் கணவர் 'குடிச்சார்'னு எப்படிக் கண்டு பிடிச்சே?
இவள்: 'ஜனகணமன'வை 'ஒன்ஸ்மோர்' கேட்டாரே!

ஆர். சுந்தரராஜன்,
பி.எஸ்.ஸி. மூன்றுமாண்டு (பௌதிகம்)
அரசினர் ஆடவர் கல்லூரி
கும்பகோணம்



என் பெண்ணும் என்னை விட்டு நகர்ந்து விடப் போகிறதா? ஆனால் இது நெற்றிக்குள் என்ன கடா் விடுகிறதோ, எதோடு கலக்க இப்படி முரட்டுத்தனம் காட்டுகிறதோ. எந்த வெளியில் குதிக்க இப்படி மறுகித் தவிக்கிறதோ, இழுத்து அதட்டி அடக்கலாம். என்ன பயன்? அடக்கி அடக்கி வளர்க்கப்பட்ட நான் என்ன சாதித்து விட்டேன். சகலமும் இந்த குழந்தைக்குப் போதித்தது தவறோ? இணையாய் கட்டார்த்து என் அறிவை ஊட்டியது பிசகோ? உன் தேடலை நான் ஏன் வழிமறித்து மடக்க வேண்டும். உன் செய்கை எனக்கு அவமானம் என்று என் சுயநலத்துக்காக உன்னை ஏன் நசுக்க வேண்டும்: உன் வாழ்க்கை உன்னுடையது காயத்ரி. உனக்குப் பறக்க நம்பிக்கை இருப்பின் வலுவு இருப்பின் பறபற மேலே மேலே. அப்படி முடியாது சிறகு முறிந்து விழுந்தால் தெரியப்படுத்து. காயத்ரி. நான் வருவேன். இதம் சொல்லுவேன். நான் வளர்த்த விதம் எனக்குப் பிடிக்கவில்லை. அப்படியிருக்க அவ்விதமே நீ வளர வேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. போய் வா காயத்ரி. போய்வா.

நாணு ஐயர் மெல்ல எழுந்து நின்றார். காயத்ரி புரிந்து கொண்டாள்.

''என் பெட்டிய நாளைக்கு ஆபீஸுக்குக் கொண்டுவந்து குடுத்துடுப்பா. ஹாஸ்டல்லே எங்கேயாவது தங்கிக்கிறேன். இன்னி ராத்திரிக்கு எங்க ஆபீஸ் டெலிபோன் ஆபரேட்டர் கூட தங்கிடுவேன். நீ மன்னார்குடி போயிடு. நான் மாசாமாசம் பணம் அனுப்பறேன். நா அங்க வரலப்பா. நீயே எனக்கும் சேர்த்து சொல்லிண்டு வந்துடு. நிச்சயம் வேற கம்பெனியில வேலை கிடைக்கும்.''

**கல்லூரி ஆசிரியர்:**

யார் கேட்டாலும்
கேட்காவிட்டாலும்
இருந்தாலும்
இல்லாவிட்டாலும்
கடமையைச் செய்யும்
பஞ்சாயத்து போர்டு ரேடியோ.

ஏ. நந்தகுமார்
இளங்கலை மூன்றாம் ஆண்டு
(வணிகவியல்)
கே. ஜி. எஸ். கலைக் கல்லூரி
ஸ்ரீவைகுண்டம்



"என்ன நாணு சார். காயத்ரி கெடைக்கலையா?'' தோட்டக் கதவு திறந்த சப்தம் கேட்டதும் விஸ்வநாதன் ஓடி வந்தான். தாழ்ந்த குரலில் பேசினான்.

நாணு ஐயர் விஷயம் சொன்னார்.

''அவதான் மடத்தனமா பேசறான்னு நீங்களும்... நீங்களும் என்ன சார் இது?...'' பதறினான்.

''விஸ்வநாதா! இந்தத் தேசத்துப் பெண்களுக்கு ஆண்கள் மேல நம்பிக்கைகொறைஞ்சுண்டு வரது. அவளுக்கு உன் மேல கோபம் இல்லை விஸ்வநாதா. அது வெறும் பொம்மனாட்டி கோபம் இல்லே. இன்னிய சகல நடவடிக்கையையும் எதிர்க்கிற கோபம். இன்னிக்கு இது அதிசயமா இருக்கலாம். பின்னால் இப்படி நடக்கத்தான் போறது. உன் பொண்ணும் உன் பேத்தியும் இப்படித்தான் இருக்கப் போறா. முன்னோடியா இருக்கிறதால காயத்ரிக்குச் சிரமம்அதிகம். பின்னால இதுவே வாழ்க்கையாவும் போயிடும்.''

''இப்படித் தனிச்சப் போறது தப்பில்லையா?''

''தப்போ, சரியோ. பயமுறுத்தலை எந்த உயிரினமும் விரும்பாது. கல்யாண உறவு பயமுறுத்தலா இருக்கற இன்னிய நிலை இப்படித்தான் மாத்தும். இந்த மாதிரி போக வைக்கும். கூட்டுக் குடும்பம் எப்படி உடைஞ்சது. நம்ம கண் முன்னாடி. அதுமாதிரி குடும்பங்கற இடமும் மெல்லச் சிதையும்.''

''நானும் தாரிணியும் சந்தோஷமா இல்லையா சார்.''

''உன்னுலே இதைக்கூடத் தாழ்ந்த குரல்லதான் கேட்க முடியறது விஸ்வநாதா.!''

''நீங்க அவளுக்கு அப்பா இல்லையா? அவள் மேல அக்கறையில்லையா?''

''வெறும் அப்பனாயிருந்தா அலறக்க இழுத்துண்டு வந்திருப்பேன். நா அவளுக்கு நல்ல ஸ்நேகிதன். ரொம்ப அக்கறைன்னு சொல்லி என் வாழ்க்கையே அவளுக்கும் விதிக்கணும்னு அழுத்திச் சொல்றதை விட அவளா புரிஞ்சுக்கட்டும்னு விட்டுட்டேன்.''

''நாளைக்கு அவ ஒரு குழந்தையோட வந்து நின்னா...''

''குழந்தை குழந்தைதானே விஸ்வநாதா. அது காயத்ரி பெத்த குழந்தையானா என்ன? வேற யார் இட்டேயாவது வாங்கிண்டு வந்தா என்ன? பொறந்த பிறகு இழிவு என்ன இருக்கு?''

''அப்பா இல்லாமல் குழந்தை பெத்தா நல்லதா. என்ன சார் சொல்றீங்க நீங்க?''

''ஒரு அம்மாவே அப்பாவோட வலிவோட இருக்கறச்சே குறை என்ன வந்துடும்? நான் கார்த்தால உன்னே வந்து பொட்டியை எடுத்துக்கட்டுமா?''

"சரி. அதுக்கு நீங்க ஏன் மறுகறேள். அப்பாவும் பொண்ணும் சரியான பைத்தியம். இதுக்கு நீங்க போட்டு ஒழட்டிப் பாரேன். இன்னிக்கு ஆபீஸ் போலையா? லீவா? நிம்மதியாப் போச்சு. பரபரன்னு ஆடவேண்டாம்.'' தாரிணி அவன் தலையைக் கோதிவிட்டு உள்ளே போனாள். பிற்பகலில் சாப்பிட்டு வெற்றிலை போட்டுக் கொண்




தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ்,
7, காசிச் செட்டி சந்து, 2வது மாடி, சென்னை-600 001 தொலைபேசி: 32450 & 32886

டிருந்த தாரிணியிடம் விஸ்வநாதன் சகலமும் சொன்னான்.

''அடி குடிகேடி. இதென்ன ரெகச்சாரம். பார்க்குல உட்கார்ந்து குழந்தை கேக்கற கூத்து. பார்க்குக்குக் கூட்டிண்டு போனது உங்க தப்பு. எனக்குப் புரியறதுன்னு. படிக்கறதுனால வந்த வினை. நான் எதுக்கு சமைக்கணும், நான் எதுக்குப் பாத்திரம் தேய்க்கணும்னு ஆரம்பிச்ச ஆம்பிளை எதுக்கு குடித்தனம் பண்ணணும்னு முடிஞ்சிருக்கு. பத்து தேய்க்கறது இழிவுன்னு தோணி. குடும்பம் நடத்தறதுக்கும் சோம்பல் வந்து டுத்து. வீடுன்னா சாக்கடை இருக்கும். யாராவது ஒருத்தர் அலம்பத்தான் வேணும். எல்லாரும் சாக்கடை அலம்ப உக்காரவும் முடியாது. அலம்பாம இருக்கவும் கூடாது. வாழ்க்கையில் சந்தோஷம் மட்டுமே வேணும்னு யார் கேக்க முடியும்? ச்சே.... ஒரு கெட்ட நேரம் நீங்க நெகிழ்ந்திருந்தா என்ன ஆயிருக்கும். ஈஸ்வரா... பெரிய விலங்கா மாட்டிண்டு விட்ட தவிச்சிருக்கும்''

''இந்த மாதிரி விலங்குல நான் மாட்டிக்க மாட்டேன் தாரிணி.''

''எனக்குத் தெரியுமே.''

''ஆனால் எனக்கு ஆபீஸ்தான் விலங்கா இருக்கு.''

''ஏன்? இதைவிட நல்ல உத்தியோகம் எங்கக் கிடைக்கும்?''

''எனக்குப் பிடிக்கலே தாரிணி. சினிமாவில நுழையணும்னு சின்ன வயசிலேர்ந்தே ஆசை.''

''சின்ன வயசிலேயே ஆரம்பிச்சிருக்க ணும். இப்ப ஆசைப்பட்டா எப்படி ..?''

''இப்ப நம்பகிட்ட இருக்கிற சேவிங்ஸ் போதும். மூணு நாலு வருஷங்கள் கஷ்டப் பட்டா ஓஹோன்னு வந்துட முடியும்.''

''ஒண்ணும் வேண்டாம். மேலே மேலே ப்ரமோஷன் வரதாப் பாருங்கோ.''

''ப்ரமோஷன் வரும் காயத்ரி. ஆனால் எனக்குப் பிடிக்கலே.''

''சுதந்திர உணர்ச்சியா? ஏத்திவிட்டுட்டுப் போயிருக்காளா மகராசி. இதோ பாருங்கோ சினிமாசினிமால்லாம் நமக்குச் சரிப்படாது. நேரம் காலம் இல்லாம....வேளாவேளைக்குச் சோறு தண்ணியில்லாத வேலை... பத்து மணிக்குப் போய்ட்டு ஆறுமணிக்கு வந்த சௌகர்யம் கெடையாது.''

''எனக்கு அந்தச் சௌகர்யம் வேண் டாம்.''

''எனக்கு வேணும். சாயங்காலம் ஆறு மணிக்கு புருஷன் வீட்டுக்கு வந்துடணும்.''

''என்னைக் கட்டிக் கட்டியே கருக்கிப் போட்டியோன்னு பயமா இருக்கு.''

''செய்வேன். நிச்சயம் செய்வேன். என்னோட சுயநலத்துக்கு இல்லே. இந்தக் குழந்தைகள் எதிர்காலத்துக்கு நிச்சயம் உங்களைக் கட்டிப் போடுவேன். என்னை எது கட்டிப் போட்டிருக்கு இந்தக் கயிறு? இல்லே. என் குழந்தைகள். உங்களைப் பிடிக்க லேன்னு நான் நகர்ந்துட்டா இதுகள் கதி என்ன?''

''எத்தனை நாட்கள் இப்படி யாருக்கோ வேலை செஞ்சு அல்லாடறது?''



வேலூரில் தொழிற்பயிற்சி நிறுவனம் ஒன்றில் இண்டர்வ்யூவுக்குச் சென்ற எனது நண்பனை, தேர்வுக் குழு அதிகாரி ஒருவர், ''உனக்குப் பாடத் தெரியுமா? ஒரு பாட்டுப் பாடு'' என்றாராம். எனது புத்திசாலி நண்பன், உடனே ''ஜனகணமன அதி நாயக...'' என்று தேசிய கீதத்தைப் பாடத் தொடங்கி விட்டான். பாடலைக் கேட்டதும், அவனைப் பாடச் சொன்ன அதிகாரியோடு தேர்வுக் குழுவே எழுந்து நின்றது. நின்றுதானே ஆகவேண்டும்!

—எஸ். சாகுல் ஹமீது
பி. காம். இரண்டாம் ஆண்டு
எம். எஸ் எஸ். வக்பு வாரியக் கல்லூரி
மதுரை

''ம்... உடம்புல தெம்பு இருக்கிற வரைக்கும். இந்த மாதிரி ஆபீஸ்தான். இந்த மாதிரி குடித்தனம் தான். இந்த மாதிரி வாழ்க்கைதான். நமக்கெல்லாம் இதான் சரி. இதான் மதிப்பு.''

விஸ்வநாதன் அயர்ந்தான். கண்களை மூடிக் கொண்டான். டெலிபோன் ஒலித் தது.

''என்ன துரை! ஆளைக் காணோம். தலைவலியா? இங்கு இருகுவலி வந்திருக் குப்பா. பாய்லர் ஒண்ணு புடுங்கிக்கிச்சு. திருச்சி பாய்லர் கம்பெனிக்குப் போய் ஸ்பேர்ஸ் வாங்கிக்கினு வரணும். ஒரு தூக்கம் போட்டு எழுந்திரு — சாயங்காலம் கார் அனுப்பறேன். அப்படியே ஃபாக்டரிக்குப் போய் விவரம் கேட்டுத் தெரிஞ்சுக்க. நேரா திருச்சி போ. நாளைக்கே வந்துடணும். என்ன...''

இந்த மாதிரி தான் வாழ்க்கை. இது தான் சரி. இதுதான் மதிப்பு.

இரவு நேரம். விஸ்வநாதன் பின் சீட்டில் சரிந்திருக்கத் தொழுப்பேடு தாண்டி ட்யூப் லைட் தொங்கும் சாலையோர சாப்பாட்டுக் கடையில் நின்றது. டிரைவர் பரோட்டா வுக்கு ஆர்டர் சொன்னான்.

''வசந்தாக்கா அங்க கார் நிக்குது. போய் பாக்கட்டா?'' மெல்லியதாய்ப் பெண் குரல் கேட்டது. பின்பக்கம் ஒரு புளிய மரத்தடியில் நிறைய பெண்கள் நின்று கொண்டிருந்தார்கள். (தொடரும்)

# நட்சத்திர (மா) நாடு

கவிஞர் மோசே

(அது ஓர் அமாவாசை இரவு. எல்லா நட்சத்திரங்களும் வானத்துக்கு வந்திருந்தன. பௌர்ணமி இரவுகளில் பட்டுப்போன விண்பூக்கள்கூட உயிர் பெற்று உலாவந்தபோது எனது கனவு களின் காதுகளில் வந்து விழுந்த கவிதை வரிகள்.)

நட்சத்திரங்களின்
மாநாடு
நடக்கிறதாம்.
அந்த
நடமாடும் புள்ளிகளின்
மனங்களில்
ஒரு ஒட்டுமொத்த
எண்ணம்
உதயமாயிற்று

ஒன்றுமட்டும்,
சன்னஒலியில்
சாதாரணமாக
பேசியது.
தனித்தனியாக
மின்னித்
தாழ்ந்து போவதா?
ஒன்றாய்
மின்னுவோம்.
மின்னலைக்
கூசவைப்போம்.
பின்
நிலவை விரட்டுவோம்.

வான சபையிலே
ஒரு
வரவேற்பு
தீர்மானம்
நிறைவேறப்போகிற
நேரத்தில்
ஒற்றைமின்னல்
ஓங்கியடித்தது.

இருளைக் கிழித்து
வெளிச்சப் புள்ளிகளை
வெளுக்கப் போட்டது.
மேகத்தை விரித்து
வானத்தை மூடியது
இயற்கை
மின்னலுக்குப்
பதில்தேடி
அந்த
நட்சத்திர நாடோடிகள்
எங்கோ மறைந்தன.

நட்சத்திரங்கள்
இருட்டுக்குள் புதைந்ததால்
அந்த
ஏழை விவசாயிக்குத்தான்
எத்தனை
சந்தோஷம்!

(கவிஞர் மோசே)
எம். சேவியர் பி. ஏ. (பி. எல்.)
சட்டக் கல்லூரி, திருச்சி.



# மலர்ச்சரத்தில் அணிவகுப்போம்

இயலுக்கும்
ஏற்புடை
நாடகத்தை
நல்லிதழாய்த்
ஆடிக்கும்
அழகழகாய்
ஆண்டுமுழுதும்
ஆட்கொண்ட

இசைக்கும்
மலர்தொடுத்து
நாட்டியத்தை
தந்துதவி,
கோடைக்கும்
மலர்ந்துநின்று,
எமை
'' கல்கியே ''!!

மாணவப்
மாண்புடன்
எதிர்வரும்
ஏற்றமுடன்
''தொடுக்கவுள்ள
அடுக்கடுக்காய்

பெருங்குலத்தோர்
நிமிர்ந்து
காலமெல்லாம்,
நடைபோட
மலர்ச்சரத்தில்
அணிவகுப்போம்!!! ''

நாளும்
நிற்க,
அவர்
''நீ''
யாம்

—ஜி. ஷைலாராணி
பி. எஸ். ஸி. கெமிஸ்டிரி
ஹோலி கிராஸ் மகளிர் கல்லூரி
நாகர்கோவில்.

ஜி. ஷைலாராணி

# அரசியல்வாதி

பாரதியின் 'வீஞ்ச் நுரை கூற்று' பாடல் திரைமைப்பு

பானுமதி

. நன்கு மேன்மைப் படுத்த
யன்றிடார் — ஏதும் — செய்திடார்.
டை யில்உள்ள நாட்களையே மிகவும்
ண்ணுவார் — பணம் — பண்ணுவார்.

ின் போது வாக்கு றுதிகளை
சுவார் — மயக்கப் — பேசுவார்:
தடுக்கப் பட்டபின் சொன்னதைக் கிணற்றில்
சுவார் — நாமம் — பூசுவார்.

மக்குக் கொடுப்பவரை யேஇங்கு
ாழ்த்துவார் — பிறரை — வீழ்த்துவார்
மனதில் மிகக்கொண்டே திட்டம்
ீட்டுவார் — நம்மை — வாட்டுவார்.

ஜாதிப் பெயரைச் சொல்லிக் கொண்டே
வருவார் — ஓட்டைப் — பெறுவார்
ஜாதியே இல்லை யென்று பின்பேச்சை
மாற்றுவார் — ஜாதியைத் — தூற்றுவார்

பதவிக் காக இவரோ மிகவும்
அலைவார் — மனம் — உளைவார்:
பதவி வந்ததும் ஊர்கள் எல்லாம்
திரிவார் — ஊழல் புரிவார்.

நாளும் வேறு கட்சி யில்இவர்
சேருவார் — மனம் — மாறுவார்
ஆளும் கட்சி எதுவோ அதனை
நாடுவார் — அங்கு — தாவுவார்.

-பானுமதி.
(பா. இரவிச்சந்திரன்).
இரண்டாம் ஆண்டு இள அறிவியல் வேதியியல்
சர் தியாகராசர் கல்லூரி.
சென்னை-21



# மாறுதல் வரும்

## "கிருஷ்ணா, கிருஷ்ணா"

நல்ல மரமாகத் தேர்ந்தெடுத்து அதில் அழகழகான கிருஷ்ணர் பொம்மைகளைத்தயாரித்துக் கொண்டிருந்தார் பெரியவர். ஒவ்வொரு கிருஷ்ணனும் தயாரிக்கப் பல நாட்கள் ஆனாலும் ஒவ்வொன்றும் ஒரு தனி அழகாகத் திகழும். இப்போது காலம் மாறிவிட்டது.முதலாளியின் மகன் இன்று தொழிற்சாலையின் அதிபராகி அதனை நவீன முறையில் மாற்றியமைக்க முற்படுகிறான். உற்பத்தியை அதிகரித்துக் கிருஷ்ணர் பொம்மைகளுக்கான ஏராளமான மேல்நாட்டு ஆர்டர்களை விரைவாகப் பூர்த்தி செய்ய இயந்திரம் நிறுவத் திட்டமிடுகிறான். பெரியவருக்கு இனி வேலை இல்லை. ரிடையராகுமாறும் கணக்குத் தீர்த்துப் பணம் வாங்கிப்போகுமாறும் கூறப் பெரிய குடும்பம் உடைய பெரியவர் கிருஷ்ண ராவ் இந்தச் சொற்ப வருவாயும் இனி கிடையாது என உணர்ந்து அதிர்ச்சி அடைகிறார்.

பாகவதர்: யூனியன் ராஜசேகரன் உடனே முதலாளியைப் போய்ப் பார்த்தான்!

### பகுதி—2

கிருஷ்ண ராவ்: பிராவிடண்ட் பண்ட், கிராஜுவிடி அதுவெல்லாம் கடன் வாங்கியிருக்கேன் மொதலாளி. ஜாஸ்தி பணமும் இல்லே. என்னை ரிடையர் பண்ணிடாதீங்கோ.

பிரகாஷ்: ப்ச்! என்னடாது!... இத பாருங்க மிஸ்டர் ராவ். உங்களை வெச்சுக்கறதாலே எங்களுக்கு ஏதாவது லாபம் இருக்கும்னு வெச்சுக்கலாம். மாசம் ஒரு பொம்மை பண்ணி அதைக் காதி பவன்லேயும், ஹாண்டிகிராப்ட்ஸ் போர்டிலயும் வெச்சுட்டு யாராவது வாங்கறாங்களான்னு பார்த்துக்கிட்டு... ம்ஹூம் முடியாது. யோசிச்சுப்பார்த்து நீங்களே ஒரு முடிவு சொல்லுங்க. உங்களை வெச்சுக்கிட்டு என்ன செய்யறதுன்னு. என்னைப் பொறுத்தவரையிலும் உங்க ஆமை வேகம் எங்களுக்கு யூஸ் இல்லே.

கிருஷ்ண ராவ்: மெஷின் வச்சே ஆகணும்னு வேற இடம் கிடைக்கலியா?

பிரகாஷ்: வேற இடங்களிலே வேறே மெஷின்கள் வரப் போவுது. இந்த இடத்தில கிருஷ்ணன் பண்ணிக்கிட்டு இருந்தீங்க கிருஷ்ண ராவ். அதுக்குப் பதிலா கிருஷ்ணன் பண்ற மெஷின்... என்யா, அதுக்கு இவர் ஞாபகார்த்தமா ''கிருஷ்ண ராவ் செக்ஷன்''னே பேர் வெச்சுரலாமாய்யா.

அளவுக்காரர்: நல்ல ஐடியா சார்!

கிருஷ்ண ராவ்: மெஷின் வெச்சா இருக்கறவாளுக்கெல்லாம் வேலை போயிடாதோ?

பிரகாஷ்: இது ஒரு புரளியா? இருக்கிறவங்களுக்கு வேலை போகாது ராவ். அவங்களுக்குஎஃபிஷியன்ஸிதான்ஜாஸ்தியாகும். இப்பப் பாருங்க டர்னர் இருக்காரு, ரத்தினம். இவரு லீவிலே போயிட்டார்னு லேத்திலே கடையறதுக்கு வேறே ஆள்

சுஜாதா





கிருஷ்ணராவ்: எனக்கு மூணு பொண்ணு ஒரு பையன்; ரெண்டு பொண்ணுக்கு இன்னும் கல்யாணம் ஆகலே. எல்லாம் படிச்சுண்டு இருக்கு. என்னை ரிடையர் ஆக்கிட்டேள்னா தெருவிலே நிப்பேன்.

கிடையாது. இவருக்குத்தான் டூல் ஆஃப் ஸெட் தெரியும். ஃபீட் ரேட் தெரியும். அதுக்குப் பதிலா ஒரு என். ஸி. மெஷின் கொண்டு வரோம். அதுல ஒரு டேப்பில ப்ரோகிராம் பண்ணி வெச்சிருவோம். அதைக்காலேல ஃபீட் பண்ணிட்டா, ரத்தினம் வந்தாலும் சரி, முத்து வந்தாலும் சரி, எல்லாருக்கும் ஒரே மாதிரி டர்ன்ட் பார்ட்டுகளை மெஷின் குடுத்துக்கிட்டிருக்கும். ரத்தினம் ஒரு நாளைக்கு எட்டு பார்ட் செஞ்சா பெரிசு. ஆனால் இதுல, திறமையே இல்லாத ஒரு ஆப்பரேட்டரை வெச்சுக்கிட்டு ஒரு அவர்க்கு எட்டு செய்யலாம். ஆனா அதுனால ரத்தினத்துக்கு வேலே போயிருமா? இல்லே. அவருக்கு என். ஸி.யை ஆப்பரேட் பண்ண ட்ரெயினிங் குடுத்தருவோம். வேலேயும் சுலபம், உற்பத்தியும் அதிகம்.

கிருஷ்ணு ராவ்: அது மாதிரி எனக்கும் வேறே ஏதாவது வேலே கத்துக் குடுத்துரலாமே!

பிரகாஷ்: அதான் யோசிச்சோம் முதல்ல. ஆனா ஒங்களுக்கு வயசாயிடுச்சு பாருங்க. உங்களுக்கு லேர்னிங் கர்வ்ங்கறது (அபிநயித்துக் காட்டி) இப்பிடிப் போகும். கண்ணில பாருங்க கண்ணாடி. சோடா பாட்டில் கணக்கா. பகல்ல பசுமாடு தெரியாம எங்கேயாவது கையைக்கொண்டு உள்ள வெச்சுட்டீங்கன்னா ஸேஃப்டிக்கு யாரு பொறுப்பு? எல்லாத்தையும் யோசிச்சுத்தான் உங்களை ரிடையர் பண்ண வைக்கிறது உங்களுக்கு நல்லதுன்னு தீர்மானிச்சோம். வேற ஏதாவது ஆல்டர்னேடிவ் நீங்களே ஸஜஸ்ட் பண்ண முடியும்னாலும் சரி.

கிருஷ்ணு ராவ்: நீங்க சொல்றதில பாதி எனக்குப் புரியலே.

பிரகாஷ்: எங்க பாஷை உங்களுக்குப் புரியாது ராவ்! அதான் ப்ராப்ளம்.

கிருஷ்ணு ராவ் (அவர் கையைப் பிடித்து): இதோ பாருங்க முதலாளி. எனக்கு மூணு பொண்ணு, ஒரு பையன். ரெண்டு பொண்ணுக்கு இன்னும் கல்யாணம் ஆகலே.

ராஜசேகரன்: உன்னை கம்பல்சரியா ரிடையர் பண்றதுக்குச் சேட்டுக்கு உரிமை கிடையாது! சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ்மெண்ட் இருக்கு! (புகைப்படங்கள்: ரங்கேஷ்)



எல்லாம் படிச்சுண்டு இருக்கு. என்னை ரிடையர் ஆக்கிட்டேன்னு தெருவில நிப்பேன்.

பிரகாஷ்: அதுக்கு என்னை என்ன பண்ணச் சொல்றீங்க?

கிருஷ்ணா ராவ்: என் பொண்ணுல யாராவது ஒருத்திக்கு வேலை கொடுத்துட்டு, என்னை ரிடையர் பண்ணுங்கோ.

பிரகாஷ்: இதென்ன பண்ட மாற்று? இத பாருங்க, நான் இந்தப் பாக்டரியில ஆள் குறைக்க முயற்சி செய்துக்கிட்டிருக்கேன்.

கிருஷ்ணா ராவ்: உங்கப்பா எங்கப்பாகிட்டே வாக்குக் கொடுத்தபடி எங்க குடும்பத்துக்கு....

பிரகாஷ்: எங்கப்பா ஊர் பூரா இந்த மாதிரி வாக்குக் கொடுத்துட்டுப் போயிட்டார். இது என்ன, அன்னச் சத்திர மாய்யா? பாக்டரி இல்லையா? யோசிச்சுப் பாருங்க. உங்களுக்கு நல்லது இதுதான். தனியா ஒரு இடத்தில கடை வெச்சுச் சுரண்டிக்கிட்டு இருங்க. ஹாண்டிகிராப்

அமெரிக்க ஜனாதிபதி வாஷிங்டனுடைய வாழ்க்கை வரலாற்றை ஒரு செல்வந்தரிடமிருந்து இரவல் வாங்கி வந்து படித்தான் ஒரு இளைஞன்.

புத்தகத்தை வீட்டில் வைத்துவிட்டுப் படுத்தான். இரவில் பெய்த மழையால் புத்தகம் நனைந்து கொஞ்சம் கெட்டுப் போயிற்று.

மறுநாள் புத்தகத்தைச் செல்வந்தரிடம் கொண்டு போய்க் கொடுத்தான். ஆனால் அவரோ, இளைஞரைக் கடிந்து, அப்புத்தகத்தைப் பெற்றுக் கொள்ள மறுத்து விட்டார்.

பிறகு, ஒரு வழியாகத் தனது தோட்டத்தில் மூன்று நாட்கள் உழைக்க வேண்டும் என்ற நிபந்தனை விதித்தார். இளைஞனும் அவ்வாறே மூன்று நாட்கள் உழைத்தான்.

புத்தகப் பிரியனான அந்த இளைஞன் யார்? பின்னால் புகழ் பெற்ற ஆப்ரகாம் லிங்கன்.

—குமாரி கே. பவதாரிணி
எம். ஏ. (முதல் வருஷம்)



டில வாங்கிக்கும்படியா நான் ஏற்பாடு செய்யறேன்.

கிருஷ்ணா ராவ் (பரிதாபமாக): ஒரு பொம்மை இருபத்தஞ்சு ரூபா. ஒரு வாரத்துக்கு ஒரு பொம்மை பண்ணிக் கொடுத்துத் தனியா நான் எப்படிப் பொழைக்க முடியும்? சொல்லுங்க மொதலாளி.

பிரகாஷ்: நாலு பெத்திருக்கீங்களே? சம்பாதிக்கப் போறாங்க.

(போகிறான் எரிச்சலுடன். மற்ற இருவரும் கூடவே செல்கிறார்கள்.)

• • •

பாகவதர்: முதலாளி போனப்புறம் கிருஷ்ணா ராவ் ரொம்பக் கவலைப் பட்டார். ''கிருஷ்ணா, இது என்னடா சோதனை!'' என்று கதறினார். அவர் மனக் கண் முன்னால் கல்யாணம் ஆகாத ரெண்டு பொண்களும் வந்து நின்னு. கர்ப்பமா இருக்கிற மூத்த பொண் நின்னு. கிழிசப் புடவையோடு அவர் மனைவியும் மெள்ள வந்து நிக்கறா. வெறும் நிக்கரோடு பையன் வேறே. யோசிச்சார். ஒரே ஒரு வழி. யூனியன் ராஜசேகரைப் பார்த்துப் பேசறதுதான்னு தீர்மானிச்சார்.

(பாகவதர் பேசிக் கொண்டிருக்கும் போது முன்னணியில் அதற்கேற்ப நடிக்கும் ராவ், மெல்லத் தம் இடத்தை விட்டு விலகிக் கொஞ்ச தூரத்தில் உட்கார்ந்திருக்கும் யூனியன் செக்ரட்டரியைப் போய்ப் பார்க்கிறார்.)

• • •

கிருஷ்ணா ராவ்: நமஸ்காரம்!

(கையைத் தொட்டுக் கும்பிடுகிறார், சரணாகதி போல.)

ராஜசேகர்: வணக்கம். வாங்க காம்ரேட். இந்த மாதிரி தலை குனியற வழக்கத்தை முதல்ல விடுங்க. நாம ரெண்டு பேரும் ஒரே சாதி. உழைப்பாளி வர்க்கம். சந்தா செலுத்திட்டீங்களா?

கிருஷ்ணா ராவ்: இல்லே. கட்டிடறேன்.

ராஜசேகர்: சரியான ஆட்டுக் கும்பல்யா. மேனேஜ்மெண்ட் அடிவருடியா இருந்துட்டு மேனேஜ்மெண்ட் உங்க மூஞ்சில காரித் துப்பறப்பத்தான் எங்க கிட்டே வருவீங்க. பரவாயில்லை. எ வொர்க்கர் இஸ் எ வொர்க்கர்! சொல்லுங்க. என்ன ப்ராப்ளம்?

• • •

பாகவதர்: ராவ் தம்முடைய பிரச்னையைச் சொன்னார். முதலாளி புதுசா மெஷின் கொண்டு வரப்போறதும், அவரை ரிடையர் பண்றதாச் சொன்னதும், அப்பாவோட

# டெட் கட்டியில் மட்டுமே உள்ளது ஸால்வெண்ட் பவர்

## இது துணிகளுக்கு முற்றிலும் பளிச்சிடும் வெண்மை அளிக்கிறது




வேறெந்த டிடர்ஜெண்ட் கட்டியும் பாரும் இதற்கு இணையில்லை பாரும்

Shilpi DM/31 A/81 Tam

இருந்த ஒப்பந்தமும் — எல்லாத்தையும் சொன்னார்.

(மிருதங்க த்வனியோடு பாகவதர் பேச, அதற்கேற்ப மேடை முன்னணியில் ராவ் அபிநயித்தல்)

● ● ●

ராஜசேகர்: ம்ஹூம்! அப்பிடியா சேதி!.. (குரலை உயர்த்தி) முதல்ல உன்னைக் கம்பல்சரியா ரிடையர் பண்றதுக்கு சேட்டுக்கு உரிமை கிடையாது. சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ்மெண்டே இருக்கு. அப்புறம் புதுசா மிஷின் கொண்டு வர்றதுக்கு முன்னாடி, அது ஹோர் கட்டிங் மெஷினா இருந்தாக் கூட, நெகோஷியேட்டிங் யூனியன் கூடப் பேச்சு வார்த்தை இல்லாம...

● ● ●

பாகவதர்: அவனால ஒரு ரோமத்தைக்கூட அசைக்க முடியாதுன்னு சொல்லிட்டான்.

● ● ●

ராஜசேகரன்: தாத்தா, நீ கவலையே படாதே. உன்னை ஓர் ஆளாலேயும் அசைக்க முடியாது.

கிருஷ்ணா ராவ்: நாளைக்கு மெஷின் வரப்போறதே! டேப்பெல்லாம் வெச்சு அளவு பாத்துட்டுச் சுண்ணாம்பு கோடு போட்டுட்டுப் போயிருக்காங்கள்.

ராஜசேகர்: அதெல்லாம் நடக்காது. மிஷின் உள்ள வந்தா எரிச்சிருவோம். இந்தியாவில ஆட்டமேஷனாவது! நூறு பொம்மை ஒரு நாளைக்கு வேணுமானா நூறு ஆளைப் போடறது! அதான் இந்த நாட்டுக்கு ஒத்து வரும்.

கிருஷ்ணா ராவ்: அப்ப, எனக்கு வேலை போகாதுங்கறேள்?

ராஜசேகர்: அதுக்கு முன்னாலே முதலாளிக்கே வேலை போயிடும். இத பாரு, பெரிய சேட்டு சொன்னாருன்னு சொன்னேல்ல? அதெல்லாம் எழுதி வாங்கிட்டு இருக்கணும். முதலாளி வர்க்கம் வாய்ப் பேச்சா சொல்றது எதையும் நம்பாதே.

கிருஷ்ணா ராவ்: தாங்க்ஸ். எனக்கு மூணு பொண்ணு, ஒரு பையன்ப்பா. மூத்தது ப்ரஸவத்துக்கு வந்திருக்கு. மத்த மூணும் படிச்சிண்டிருக்கு.

ராஜசேகர்: என்ன வயசு?

கிருஷ்ண ராவ்: எல்லா வயசிலேயும் இருக்கு. என்ன செய்வேன் நான்?

ராஜசேகர்: சரி. ரெண்டாவது மகளை யூனியன் ஆபீசுக்கு அனுப்பு. பார்ட் டைமா வேலை செய்யட்டும்.

கிருஷ்ணா ராவ்: சரி. அப்ப எனக்கு வேலை?

ராஜசேகர்: கவலைப்படாதே. நாங்க இருக்கோம். உங்க கிருஷ்ணனைக் காப்பாத்த.



ஒரு நாள் மூன்று மாணவர்கள் வகுப்புக்குத் தாமதமாக வந்தார்கள். உதவிப் பேராசிரியர் ''ஏன் தாமதமாக வந்தீர்கள்?'' என்று வினவினார். முதல் மாணவர், ''நான் வந்த சைக்கிளின் ட்யூப் வெடித்து விட்டது'' என்றார். இரண்டாவது மாணவரும் ''சைக்கிள் டியூப் வெடித்து விட்டது'' என்று தாமதத்திற்கான காரணம் கூறினார். மூன்றாவது மாணவரும் அதே காரணத்தைக் கூறினார். உதவிப் பேராசிரியர் கோபத்துடன் ''ஏம்பா! மூன்று பேருடைய சைக்கிளிலுமா டியூப் வெடித்து விட்டது?'' என்றார். அதற்கு மாணவர்கள் ''நாங்கள் மூவரும் ஒரே சைக்கிளில் தான் சார் வந்தோம்!'' என்றனர்.

எஸ். முத்துப்பாண்டி,
பி. காம், முதலாண்டு,
அரசினர் கலைக் கல்லூரி,
மேலூர், மதுரை மாவட்டம்

கிருஷ்ணா ராவ்: இப்பதாம்பா புரியறது. இந்த யூனியன் எல்லாமே தேவையில்லாத விஷயம்னு நினைச்சுண்டு இருந்தேன். அநியாயம் நடக்கறப்போதான், உங்க தேவை எனக்குப் புரியறது.

ராஜசேகர்: ''எங்கெங்கே அநியாயம் நடக்குதோ, அங்கே நான் தோணுவேன்''னு உங்க கிருஷ்ண பரமாத்மாதானே சொல்லி இருக்காரு!

கிருஷ்ணா ராவ்: சரிப்பா வரேன். சந்தா கட்டிர்றேன். சில்வர் ஜூபிலிக்குக் கூட அன்பளிப்பு தரேன்.

ராஜசேகர்: அதெல்லாம் வேண்டாம். உன் டாட்டரை வேலைக்கு அனுப்பு. போதும்.

● ● ●

பாகவதர்: யூனியன் ராஜசேகரன் உடனே முதலாளியைப் போய்ப் பார்த்தான்.

(தொடரும்)

பிரதாப்பிற்கு இருப்பு கொள்ளவில்லை. நெஞ்சமெல்லாம் மகிழ்ச்சியால் நிரம்பி வழிந்தது. காரணம், அவனுடைய மனைவி புஷ்பா. அதோ கூடத்தில் அவன் அம்மா, தங்கையுடன் என்னமாய் அரட்டை அடித்துக் கொண்டிருக்கிறாள். அவள் புகுந்த வீட்டுக்கு வந்து மூன்று மாதங்கள் ஆகிறது.

தனக்கு வரப்போகிற மனைவியைத் திருமணத்திற்கு முன் மானசீகமாக சிருஷ்டித்து வைத்திருந்தான்.

''டேய் பிரதாப் நீ சொல்றதைப்பார்த்தா அந்த சீதையே மறுபடியும் பொறந்து வரணும் போல இருக்கே! நீ இதுமாதிரி கற்பனை எல்லாம் பண்ணிக்கிட்டிருந்தால் இந்த ஜன்மத்துல சத்தியமா உனக்குக் கல்யாணமே நடக்காது'' அவன் நண்பன் மோகன் பலமுறை கேலி செய்து இருக்கிறான். கேலி செய்த நண்பன் மோகனை திருமணத்தின் போது, ''நீ உண்மையிலேயே அதிருஷ்டக்காரன்டா'' என்று காதில் கிசுகிசுத்த போது அவன் கிறுகிறுத்துப் போனான்.

இந்த மூன்று மாதத்தில் அவனை நன்றாகப் புரிந்து வைத்துக் கொண்டு அவன் தேவைகளை அவன் கேட்காமல் முகம் கோணாமல் நிறைவேற்றினாள் புஷ்பா.

எட்டு மணியாகியும் இன்னும் கொஞ்ச நேரம் தூங்கலாமே என்று உடம்பு கெஞ்சிக் கேட்டுக் கொள்ளும் இந்தக் குளிர்காலத்திலும் ஆறு மணிக்கெல்லாம் குளியலை முடித்துவிட்டுப் புது ரோஜா போல் கையில் காப்பியுடன் அவன் முன் பிரசன்னமானாள் புஷ்பா. அவன், அவளைப் பிடித்து இழுக்க, அவன் மேல் சரிந்தாள். 'சீ விடுங்க இப்பத்தான் குளிச்சிட்டு வந்தேன். ஐயோ, அத்தை வர சத்தம் கேக்குது' அவன் கைகளில் நெளிந்தாள். 'அத்தை சொத்தை எல்லாம் மாடியேறி இங்கே வரமாட்டாங்க. புஷ்பா...!''

''இருங்க அத்தையைக் கூப்பிடறேன். அத்....'' அவன் அவள் வாயைப் பொத்திக் கொண்டான். ஒரு வழியாக அவன் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, 'சரி, சரி, காப்பி ஆறிப் போகுது சீக்கிரம் எழும்புங்க. இதோ போய் பேஸ்ட் பிரஷ் எடுத்துக்கிட்டு வரேன். படியிறங்கி மான் போல ஓடிவிட்டாள். அவள் சென்றாலும் அவள் விட்டுச்சென்ற மெல்லிய மணம் இன்னும் அறையில் வியாபித்திருந்தது.

நேற்று நடந்த வேடிக்கை அவன் மனத்தில் வந்தது.

''ஏன்டி மாலா, நீ என்னிக்காவது ஃபிரிஜ்—ஜை கைவச்சி துடைச்சிருக்கியா? உங்க அண்ணி கைபட்டதும், டீ.வியும் ஃபிரிஜ்ஜும் என்ன, இந்த வீடே எப்படி ஜொலிக்குது பார்த்தியா?''

''அட நீங்க ஒண்ணு. சும்மா இருங்கம்மா. அண்ணி எல்லாம் காரியமாத்தான் செய்வாங்க. அண்ணன் கிளினிக்கிலிருந்து வந்ததும் அப்படியே பார்த்துப் பூரிச்சுப் போய்... அப்புறம்...'' மாலா, புஷ்பாவைப் பார்த்துக் கண்ணடித்தாள்.

''ஐயையோ இந்த அநியாயத்தைப்பார்த்தீங்களா அத்தை. இந்தக் கழுதை இன்னும்

பாலசந்தர்
முதலாண்டு ஆங்கில இலக்கியம்
முத்துரங்கம் அரசு கலைக் கல்லூரி
வேலூர்

# குருடன்



காலேஜ் காம்பவுண்ட் கூட மிதிக்கல்லே. அதுக்குள்ளே என்னென்ன பேசரு பார்த் தீங்களா... மொதல்ல இதைக் காலேஜ்ல இருந்து நிறுத்திட்டு ஒரு கால் கட்டு போட ஏற்பாடு டண்ணுங்க!'' அதற்குப் பின் நடந்த கூத்தும் கும்மாளமும் நினைத்துப் பிரதாப் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான்.

டிபனை முடித்து டிரெஸ்ஸிங் ரூமுக்குள் நுழைந்தபோது ஒரு செட் டிரஸ்ஸும், டையும் ரெடியாக இருந்தது. பின்னாலேயே கொலுசின் இனிமையான இசை. அவ னுக்கு டை கட்டுவது அவன் அன்பு மனைவி புஷ்பாதான். மேட்சான டையை ஏற் கெனவே அவள் தேர்ந்தெடுத்திருந்தாள்.

''புஷ்பா இப்ப நீ ஒண்ணும் கோவமா இல்லையே?''

''இல்லையே... ஏன் கேட்கறீங்க?''

''வந்து... டை கட்டப் போற இல்லே அதுக்குத்தான் கேட்டேன்...'' 'களீர்' எனச் சிரித்தபடி ''இந்த நூற் ருண்டின் தலைசிறந்த அறுவை ஜோக் மன்னர் நீங்கதான்'' என்றாள்.

காரில் செல்லும் போது கூட அவள் நினைவே சுற்றிச் சுற்றி வந்தது.

துவலைவ சீப்பை அவன் எடுப்பதற்கு முன் எடுத்து நீட்டும் அவள் பூக்கரம். களைப்புடன் வரும்போது ஃபிரிஜ்ஜிலிருந்து ஐஸ் வாட் டரை எடுத்துக் கொடுக்கும் கனிவு, குளிக்கும்போது எந்த வேலையிலிருந்தாலும் அதனை உதறிவிட்டு முதுகு தேய்க்க வரும் அவள் அன்பு. மனம் சோர்ந்திருக்கும் போது சிரித்துப் பேசி அதனை விரட்டி



அடிக்கும் யதார்த்தம். ஆகியவற்றால் அவன் அந்த நேரத்திலும் மெய்சிலிர்த்துப் போறான். அவன் நண்பன் ரவிக்குத்திரு மணமாகி இரண்டு மாதங்களில்லிடய கண வன் – மனைவியிடையே கருத்து வேறுபாடு களும், மனஸ்தாபங்களும் ஏற்பட்டதைக் கேள்விப்பட்டான். இதையெல்லாம்எண்ணும் போது தான் பெற்றது பெரும் பாக்கி யம் என நினைத்தான்.

நினைவுகள் எங்கோ பறந்தாலும் பழக்க தோஷத்தால் கார் அவன் கிளினிக் முன் வந்து நின்றது. முகப்பில்.

'புஷ்பா மன நோய் மருத்துவமனை' ஆம், பிரதாப் இந்த நகரில் ஒரு தலைசிறந்த மனநோய் மற்றும் மனோதத்துவ நிபுணன். ஏற்கெனவே பெஞ்சில் அமர்ந்திருந்தவர்கள் 'கியூ' நீண்டிருந்தது.

அன்று மாலை வழக்கம் போல் வீட்டின் கூடத்தில் அமர்ந்து எல்லோரும் அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர். பிரதாப்புக்கு அவன் தாய் மீது ஏகப்பிரியம். ஒவ்வொரு நாட்களில் அம்மாவும் பிள்ளையும் அரட்டை அடிக்கும் போது வீடே அமர்க்களப்பட்டு விடும்.

அன்று கூட சோஃபாவில் அவன் அம்மா மடி மீது தலை வைத்து ஏதோ புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தான். அவன் அம்மா அவன் தலைமுடியை வருடியபடி ஏதோ பேசிக் கொண்டிருந்தாள்.

''என்ன அண்ணா! மடி மாறிப் படுத் துட்டே? நீ படுக்க வேண்டிய மடி இங்கே காலியா இருக்கு... போயும் போயும் கொழந்தை மாதிரி அம்மா மடியில் போய்ப் படுத்துக்கிட்டிருக்கியே'' என்று மாலா அவனைச் சீண்டினாள்.

''ஏய், அதிகப் பிரசங்கி... வரவர உனக்குத் திமிர் அதிகமாயிட்டே வருது. உங்க பிரின்ஸிபால் கிட்டே சொல்லி வாலை ஒட்ட நறுக்கச் சொல்றேன் இரு!'' என்று செல்லமாக அதட்டினான்.

புஷ்பா ஏனோ இவர்கள் அரட்டையில் மனம் லயிக்காமல் தாய் மடியில் மகன் படுத்திருந்த காட்சியையே ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டு இருந்தாள்.

மெதுவாகப் படுக்கையறைக் கதவைத் திறந்தான் பிரதாப். மெல்லிய நறுமணம் மயக்கமூட்டியது. நைட் லேம்பின் மெல்லிய வெளிச்சத்தில் கட்டிலில் முதுகைக் காட்டிய படி படுத்திருந்த புஷ்பாவின் பின்புற வனப்பு அவனுக்குப் போதையூட்டியது.

அதிர்ச்சி!

பால் போன்ற அவள் முகத்தில் வெள்ளிக் கோடாய்க் கண்ணீர் அந்த மெல்லிய வெளிச் சத்தில் பளபளத்தது. அவர்கள் தாம்பத்திய வாழ்க்கையில் அவள் அழுது அவன் பார்ப் பது இதுவே முதல் தடவை.

'என் அன்பு ரோஜா கண்ணீர் வடிப்ப தற்குக் காரணம்?'

பேசுவதற்கும் மறந்துஒருகணம்திகைத்துப் போனான்.

'அம்மா ஏதாவது சொல்லியிருப்பார் களா?' 'மாலா ஏதாவது...?'

புஷ்பாவை இதமாக அணைத்தபடி, ''புஷ்பா... நீ அழுதால் என்னால தாங்க முடியாதும்மா... நீ எதுக்காக அழுறே?.... அம்மா ஏதாவது சொன்னாங்களா?'' என்று கேட்டதும் அவள் மௌன அழுகை விசும்பலாக வெடித்தது.

''வீறு அத்தை மேல ஒண்ணும் சொல்லா தீங்க... நீங்களே சொல்லுவீங்க, சொல்லு வீங்கன்னுதான் நான் எத்தனை நாள் ஏங்கிகிட்டிருந்தேன் தெரியுமா? நேர்லேயே தினம் தினம் பார்க்கும்போதே உங்க அம்மா மேலே உங்களுக்கு எவ்வளவு ஆசை இருக்கு. இத்தனை நாள் பார்க்காம இருந்த எனக்குக் கொஞ்சமாவது ஆசை இருக்காதான்னு நீங்க நெனச்சிப் பார்த் தீங்களா?'' உங்க அம்மா அப்பாவைப் பார்க்க ணும்னு உனக்கு ஆசையா இல்லையா, போயிட்டு வரலாமா'ன்னு நீங்க ஒரு நாளாவது கேட்டிருக்கீங்களா? ..''

அவன் பிடி தளர்ந்தது. உலகமே தலை கீழாகச் சுற்றியது. சராசரி தகுதியுடைய ஒரு பெண் தன் உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு மூளையின் கட்டளைகளைத் தன் உடல் ஏற்கும் முன் செய்து முடித்த அவள் விவேகத்தை எண்ணி வியந்தான் பிரதாப். ஒரு சராசரி மனிதனுக்குத் தெரியக் கூடிய இந்த ஞானம், ஊரே போற்றும் தன் மனோதத்துவ மூளைக்குத் தெரியாமல் போய் விட்டதே. என்று எண்ணித் தனக்கு முன் குழந்தை போல் தேம்பும் அந்த மா மானிடப் பிறவியின் முன் கூனிக் குறுகி வெட்கப்பட்டுப் போனான்.

தமிழ்ப் பேராசிரியர் வகுப்பிற்குள் நுழைந்த பின்பு கூட மாணவர்களின் முணு முணுப்பு அடங்கவில்லை.

''மாணவர்கள் காதலிக்கவேண்டும்'' என்றார். உடனே அமைதி.

''நான் வகுப்பு எடுக்கும்போது பாடங்களைக் கேட்கக் காதுகளை அளிக்க வேண்டும்'' என்றவுடன் மாணவர்கள் டெஸ்கைத் தட்டி ஆரவாரம் செய் தனர்.

தொடர்ந்து அவர், ''நான் ஏதா வது கூறினால் பல கைகள் தட்டப் படலாம். ஆனால் 'பலகைகள்' தட்டப் படக் கூடாது'' என்றவுடன் மாண வர்கள் கரவொலி காதைப் பிளந்தது!

—சித்ரா ஆனந்தன்
(எம். போகனத்),
எம். எஸ்ஸி 2ம் ஆண்டு,
அரசு கலைக் கல்லூரி, சேலம்





"உங்க தாத்தா என்னை ஒரு தடவை பார்த்ததும் இவளைத்தான் கலியாணம் பண்ணிப்பேன்னு அடம் பிடிச்சு கட்டிக் கிட்டாரு?"

"அப்ப கூட ராகமாலிகா புடவைதான் கட்டிகிட்டு இருந்தயா பாட்டி" "இல்லே கண்ணு என் அழகை பார்த்து தான் அப்படி செய்தாரு."

**ராகமாலிகா சேலைகள்**

சுகன் ஆர்கேட்
பனகல் பார்க் அருகில்
நாகேஸ்வரராவ் ரோடு,
தி. நகர், சென்னை-600 017
(ஞாயிறு கடை உண்டு)

## யார் நல்லவர்கள்?

நல்ல மனிதர்களுக்கு முதலில் மனம் முதிர்ச்சியடைந்த பிறகு உடல் முதிர்ச்சி அடையும்.

எங்களது சுவையான இனிப்பு மற்றும் காரவகைகளை வாங்கி நல்லவர்களுக்கு கொடுங்கள்.

இருமணம் போன்ற விசேஷங்களுக்கு "பருப்புத் தேங்காய்", "அதிரசம்", "கைமுறுக்கு" போன்றவை தயாரித்துத் தருகிறோம்.

மற்ற **இனிப்புகள்:** ரசமலாய், சோன்பப்டி, கோதுமை அல்வா, லட்டு மற்றும் பல

**காரம்:** தட்டை, தேன்குழல், சீடை, மிக்ஸர், உருளைகிழங்கு சிப்ஸ், சமோசா

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, II மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு போன்: 412557

"காமதேனு" கூட்டுறவு சிறப்பங்காடி, தேனும்பேட்டை

150, கீழ்த்தளம், பவுண்டன் பிளாஸா, பாந்தியன்சாலை, எழும்பூர்

# மல்லிக் கண்ணுக்கு மகிழ்ச்சியான செய்தி!

எஸ். சாகுல் ஹமீது
பி. காம். இரண்டாம் ஆண்டு
எம்.எஸ்.எஸ். வக்பு வாரியக் கல்லூரி
மதுரை

நாடகத்தில் நட(ன)மாடுவோர்:

ரவிக்குமார்–டி.டி.எம். கம்பெனியின் ஹெட் கிளார்க்
மல்லிகா — அவருடைய மனைவி
சுரேஷ் — ரவிக்குமார், மல்லிகா தம்பதியரின் குழந்தை
சின்னத்தம்பி: ரவிக்குமாரின் நெருங்கிய நண்பன். எம்.ஸி.யும் கூட

## காட்சி 1

இடம்: டி.டி.எம். பிரைவேட் கம்பெனி
நேரம்: மதிய உணவு வேளை
பாத்திரங்கள்: ரவிக்குமார், அவனது நண்பன் சின்னத்தம்பி.

ரவிக்குமார்: டேய் சீனுதானு! (சின்னதம்பியை அவன் இப்படித்தான் அழைப்பது வழக்கம்) நீ சொன்ன விஷயத்தைக் கேட்டதிலிருந்து நான் எவ்வளவு மகிழ்ச்சியாய் இருக்கேன் தெரியுமா? (உணர்ச்சி



ஒரு சமயம் என் நண்பன் தனது அறையின் சாவியைத் தொலைத்துவிட்டான். எனவே உடனே வீட்டுக்குக் கடிதம் எழுதி மற்றொரு சாவியைத் தபாலில் அனுப்பும்படி வேண்டினான். நான்கு நாட்களுக்குப் பின் தபால்காரரைப் பார்த்த அவன், ''கடிதம் ஏதாவது வந்ததா?'' என்று கேட்டான்.

தபால்காரர், ''ஒரு கடிதம் வந்தது. அதில் ஏதோ கடினமானபொருள் இருந்தது. உங்கள் அறைக் கதவு வழியாக உள்ளே போட்டுவிட்டேன். எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

அவரின் பதிலுக்கு அவன் முகம் பரிதாபமாகியது.





நாம் அருந்தும் ஒரு கப் காப்பியினால்
1. அட்ரினல் சுரப்பியில் சுரக்கும் இரண்டு அமிலங்களும் அதிக அளவில் இரத்தத்தில் கலக்கிறது.
2. இரத்தத்தில் உள்ள சர்க்கரையின் அளவு அதிகமாகிறது.
3. இரத்தம், இருக்கும் அழுத்தத்திலிருந்து பத்து சதம் அதிகரிக்கிறது.
4. நமது நாடித் துடிப்பு சிறிது குறைகிறது.

காபியில் உள்ள காஃபின் (Caffeine) என்ற பொருளே இதற்குக் காரணம்.

—சித்ரா ஆனந்தன்

எம். யோகானந்த்
2ம் ஆண்டு எம்.எஸ் ஸி. ஸ்ரீவாவாஜி
அரசு கலைக் கல்லூரி, சேலம்-7

வசப்பட்டவாறு) டேய்! இன்றுதான் என் வாழ்வில் மறக்க முடியாத பொன்னாள்.

சின்னத்தம்பி: டேய் ரகு! இந்தச் சின்ன விஷயத்துக்கெல்லாம் இப்படி நீ உணர்ச்சி வசப்பட்டுக்கிட்டு...

ரவிக்குமார் (குறுக்கிட்டு): நோ சின்னதானு. உனக்கு நல்லாத் தெரியும். நான் அலைந்த அலைச்சல் – செலவழித்த பணம்... இவையெல்லாம் வீணாகி விடுமோ என இன்று பகல் 12-51 வரை எண்ணி வருத்தப்பட்டுக்கிட்டிருந்தேன். ஆனால் 12-52க்கு நீ என்னிடம் இங்கு வந்து, மெதுவாக 1-05க்கு இந்த விஷயத்தைச் சொன்னதும் தான், இத்தனை நாள் நான் செலவு செய்த பணம், அலைந்த அலைச்சல் வீணாகவில்லை என்று தெரிந்து கொண்டேன்.

சின்னத்தம்பி: டேய் ரகு! சேச்சே என்ன இது? நமக்குள்ள தாங்ஸ், அது இதுன்னு உளறிக்கிட்டு...

ரவிக்குமார்: நோ சின்னதானு, நீ செய்த உதவி இமயம், அதைவிட மேலானது.

சின்னத்தம்பி: சரி சரி உளறாதே.

(சின்னத்தம்பி சென்றதும் ஹெட்லொர்க் ரவிக்குமார் தாள முடியாத மகிழ்ச்சியில் நாற்காலியி லிருந்து எகிறி 'ஹைஜம்ப்' பண்ண, 'க்ரீச்சிட்ட நாற்காலியின் ஒரு கால் முறிகிறது.)

## காட்சி 2

இடம்: 'அரண்மனை இல்லம்' என்று ரவிக்குமாரால் பெயரிடப்பட்ட மொத்தம் நான்கு அறைகளே உள்ள ரவிக்குமாரின் வீடு.

நேரம்: டிபன் வேளை.

பாத்திரங்கள்: ரவிக்குமார், அவரது மனைவி, குழந்தை.

(ரவிக்குமார் ஆபீஸிலிருந்து வீட்டிற்குள் நுழைகிறான்.)

ரவிக்குமார்: மல்லி! ஒரு மகிழ்ச்சிகரமான நியூஸ். ஓடிவா வெளியே ஓடிவா.

மல்லிகா (சமையலறையிலிருந்து சாப்பியுடன் வந்து) ஆமாம். போனவாரம் இப்படித்தான் 'மிகவும் மகிழ்ச்சியானசெய்தி' என்றீர்கள். நான் அலுவலகத்திலிருந்து தியேட்டருக்குப் போய் இரண்டு சினிமா டிக்கெட்டுகள் வாங்கிவிட்டு, வீட்டில் வந்து உன்னையும் அழைத்துப் போகிறேன் என்றீர்கள். பிறகு 'தியேட்டர்வாசலில் 'ஹவுஸ் ஃபுல்' போர்டு என் கண்ணில் பளிச்செனத் தெரிந்தது' என்றீர்கள்.

ரவிக்குமார்: போன வாரம் நிகழ்ச்சிக்கு ரொம்ப ஸாரி மல்லி (கையிலிருந்த ஒரு பார்சலை எடுத்து அவளது கையில் திணித்து) கண்ணு மல்லி, மல்லிக்கண்ணு! இப்போது நான் சொல்லப் போறது உண்மையிலேயே மகிழ்ச்சியான செய்திதான்,

அது என்ன என்று நீயே சொல்லு! சுரேஷைப் பக்கத்து வீட்டு மாமியிடம் விட்டுவிட்டு உன்னை மட்டும் சினிமாவுக்கு அழைத்துப் போகத் தயார். எங்கே, நான் சொல்ல வந்த மகிழ்ச்சியான செய்தி என்னன்னு சொல்லு பார்க்கலாம்.

மல்லிகா (பார்சலைப் பிரித்துச் சேலையை எடுத்தவாறு): ஓ.கே. சொல்லிவிடவா? மாமாவும் அத்தையும் ஊரிலிருந்து வருவதாக உங்கள் ஆபீசுக்குப் போன் செய்தார்கள். சரிதானே? நான் டிரஸ் சேஞ்ச் பண்ணிட்டு வந்திடறேன், சினிமாவுக்கு.

ரவிக்குமார் (குறுக்கிட்டு): அசடு. நீ அறிவேயில்லாத அசடுன்னு இன்றைக்கு நிரூபிச்சிட்டே. உன்னுடைய மதிப்புக்குரிய மாமாவும் அத்தையும் இங்கு வந்தால் எனக்கென்ன சந்தோஷம் வேண்டிக்கிடக்கு. தண்டச் செலவுதான். இது வேறு விஷயம். நன்றாகச் சிந்தி. சினிமாவை நினைக்காதே.

மல்லிகா: ம்... வந்திடுச்சு. உங்களுக்குப் பிரமோஷன்?

ரவிக்குமார் (வருத்தத்துடன்) மல்லிக் கண்ணு. என் குரங்கு மூஞ்சி மானேஜர் ஆபீஸில் இருக்கிறவரை எனக்கு உடைந்த நாற்காலிதான்.

மல்லிகா (குறுக்கிட்டு): ம்... தெரிந்திடுச்சு! நீங்கள் வாங்கிய இமாலயா லாட்டரியில் பரிசு?

ரவிக்குமார்: நோ...நோ.

மல்லிகா: நான் வாங்கின மேகாலயா லாட்டரியில்?

ரவிக்குமார் (குறுக்கிட்டு): உனக்கோ எனக்கோ இந்த ஜன்மத்தில் லாட்டரியில் பரிசு விழாது. விஷயம் என்ன என்று நானே சொல்லிடறேன். என்னுடைய நண்பன் சீனுதான் ஆபீசுக்கு வந்தான். அவனுடைய முயற்சியாலும், செல்வாக்கினாலும் நம்முடைய குழந்தை சுரேஷுக்கு...

மல்லிகா (குறுக்கிட்டு): தெரிஞ்சிடுத்து. நம்முடைய சுரேஷுக்கு லயோலா நர்சரிப் பள்ளியில் அட்மிஷன் கிடைத்துவிட்டது. சினிமாவுக்குக் கிளம்புங்கள். சுரேஷ்.... சுரேஷ்... என் கண்ணு வாடா இங்கே...

சுரேஷ் (வெளியிலிருந்து): அம்மா ஐஸ் ஐஸ் வேணும்!

மல்லிகா (சுரேஷைத் தூக்கியவாறு மகிழ்ச்சியுடன்): கண்ணு பள்ளியில் உனக்கு இடம் கிடைத்து விட்டது. தியேட்டரில் கோன் ஐஸ் சாப்பிடலாம். இந்தக் குச்சி ஐஸ் எல்லாம் வேண்டாம்.

(மகிழ்ச்சியில் குழந்தையைத் தூக்கி 'சர்சர்' என்று சுற்றி அவனுடைய இரு கன்னங்களிலும் மாறிமாறி முத்தமிடுகிறாள். ரவிக்குமார் தியேட்டர் செலவைக் கணக்கிட, அவனது தலை 'சர்சர்' என்று சுற்றுகிறது.)

# 20% GOVT. REBATE
## ON HANDLOOMS
(1st Oct. to 8th Oct. 1983)

**You can make your house a paradise**

**Let us Share that Pride**





# THE WEAVER

(Haryana Govt. Undertaking)

A venture of :
HARYANA STATE HANDLOOM & HANDICRAFTS CORPN. LTD.

**It's furnishings are unparallel in quality, durability & fascinating designs**

**MADRAS : 700, Mount Road.**
**BANGLORE : M.G. Road.**




**புத்தி வருமா?**

● அணுமின் நிலையங்களை விட அனல்மின் நிலையங்கள் சிறப்பானது என்பதைச் சுட்டிக் காட்டியிருப்பது சம்பந்தப்பட்டவர்களைச் சிந்திக்க வைக்கும்.

சென்னை-57 — இரணியல் 'கலை'

**கௌரவம்**

● 'வட்டமேஜை'ப் பகுதியில் எழுத்தாளர்களைக் கௌரவித்து, அவர்களின் பெயர்களை வரிசைக்கிரமமாக மேல் பகுதியிலேயே பிரசுரம் செய்திருப்பது பாராட்டுக்குரியது.

திருச்சி-5 — வி. கே. துரைசாமி அய்யர்

**மோதிரக் குட்டு!**

● திரு சீனிவாசன் நாசூக்காக ஹேமா-ஆனந்த தீர்த்தனின் எழுத்தில் உலவும் சிறு சிறு 'அந்த'மாதிரி விஷயங்களைக் குட்டி விடை பெற்றுச் சென்ற விதம் என்னை வெகுவாகக் கவர்ந்தது.

தக்கலை (குமரி) — எஸ். லீலா ராம்

**மனநிறைவு**

● நல்ல இலக்கிய நடை கொண்ட 'பூக்கள் இன்று புலம்புகிறது' கவிதை முழு மனநிறைவைத் தந்தது.

திருச்சி-17 — ஏந்தல் ஆர். இளங்கோ

எனக்கு ஓவியம் வரைவதில் மிகுந்த ஆர்வம் உண்டு. ஒருமுறை பாக்யராஜ் படத்தை வரைந்து அவரிடம் கையொப்பம் வாங்க ஆசைப்பட்டு அனுப்பினேன். அவரும் அன்புடன் ஏற்றுக் கையொப்பமிட்டு, திருப்பி அனுப்பி வைத்தார்.

அருடையப்பன்
பி. எஸ்ஸி மூன்றும் ஆண்டு
எம்.டி.டி. ஹிந்து கல்லூரி, திருநெல்வேலி



**புதிய கோணம்**

● 'இரும்புக் குதிரைகளை' அற்புதமாக ஆக்குகிறார் பாலகுமாரன். ஒவ்வொரு முறையும் ஒரு புதிய கோணத்தையே பார்ப்பது போன்ற பிரமை ஏற்படுகிறது.

சென்னை-92 — கே. ஆர்.

**நெஞ்சில் நிற்கிறார்**

● சுஜாதாவின் 'வாசல்' குடும்பத்தில் சில பெரியவர்கள் செய்யும் சேஷ்டைகளை யதார்த்தமாக மாமாவின் கேரக்டர் மூலம் வெளிப்படுத்துகிறது. பூர்ணம் நம் நெஞ்சில் நிஜமாகவே உலவுகிறார்.

வேலூர் — வேணுகோபால்

**பத்திரப்படுத்தினேன்!**

● குழந்தைகளுக்கான வைத்தியக் குறிப்புக் கட்டுரை தாய்மார்கள் படித்துப் பாதுகாப்பாகப் பத்திரப்படுத்த வேண்டிய கட்டுரை.

பரசலூர் — என். புவஞ் நாகராஜன்

**ஊர் மாற்றம்**

● சிதம்பரத்துக்கு அருகில் உள்ள அமைச்சரின் கிராமத்திற்குக் 'கின்னை' என்பதுதான் பெயர். பேச்சு வழக்கிலும் பேருந்து வண்டிகளிலும் அதைத்தான் பயன்படுத்துகிறார்கள். கின்னி அல்ல.

சிதம்பரம் — 'சிதம்பரநாயகன்'

**'கோரஸ்'**

● புதிய அமைச்சர்கள் புதிய செய்திகள் சுவாரஸ்யமாய் இருந்தது. ஆனால் அமைச்சர்கள் அனைவரும் அந்த டைரியில் புரட்சித் தலைவர் 'கோரஸ்' பாடியதுதான் பிடிக்கவேயில்லை!

பல்லாவரம் — ப. பழநி

**அற்புத விளக்கம்**

● தேவிபாலா எழுதிய ''வா அருகில் வா'' —ஒரு மர்ம நாவல் மட்டுமல்ல! ஸிஸ்டர் என்ற வார்த்தைக்கு அற்புத விளக்கம். ஓர் ஒப்பற்ற குடும்பச் சித்திரம்.

மதுரை-1 — பி.எல். பரமசிவம்

## போட்டிக்கதை 6

"தாத்தா! அம்மாவுக்குக் காய்ச்சல் கூடுதலாத்தானிருக்கு. நீ அம்மா பக்கத்துல போயி இருந்துக்கோ. நான் சீக்கிரமா டாக்டரைக் கூட்டிக்கிட்டு வாரேன்.''

''டாக்டரைக் கூப்பிடலாம்பா. கையில கால்காசு இல்லியே. அதுதான் யோசிச்சுக்கிட்டிருக்கேன்.''

''தாத்தா! எங்கிட்ட ரெண்டு ரூபாய் இருக்கு. காணுட்டி அப்புறம் தர்றேன்னு சொல்ல வேண்டியதுதான்.''

தாத்தாவிடம் இருந்து எந்த பதிலையும் எதிர்பாராமல் செல்வம் ஓடினான். செல்வத்தின் போக்கில் ஒருவிதமான பெருமிதம் பொன்னுசாமிக்கு.

நேரம் சிறிது கழிந்தது.

டாக்டர் ஒருவர் குடிசைக்குள் நுழைந்தார். செல்வம் பின்தொடர்ந்தான்.

வாடிப் போன தும்பைப் பூவைப் போல் துவண்டு கிடந்தாள் லட்சுமி.

டாக்டர், லட்சுமியின் உடலை நன்கு பரிசோதனை செய்துவிட்டு, காய்ச்சலுக்கான ஓர் ஊசியைப் போட்டு, இரண்டு மாத்திரைகளைக் கொடுத்தார்.

''ஐயா, பெரியவரே! இந்தக் காய்ச்சல் ஒரே ஊசியிலே குணமாகக் கூடிய சாதாரணக் 'காய்ச்சல் இல்லே. இன்னும் ஒரு வாரமாவது குறைஞ்சது 'ட்ரீட்மெண்ட்' பண்ணனும். அப்பத்தான் சரியாக வரும். இந்தச் சீட்டுல நான் எழுதித் தர்ற ஊசி மருந்து, மாத்திரைகளை உடனடியா வாங்கி வைங்க. சாயங்காலம் கண்டிப்பா இந்த மருந்தை ஊசி போடணும்'' என்று ஒரு சீட்டில் மருந்தை எழுதி அதைப் பொன்னுசாமியிடம் கொடுத்தார்.

அவர் அதைப் பேரன் செல்வத்திடம் கொடுத்து, 'பத்திரம்' என்றார். அந்த மருந்து, சீட்டை டவுசர் பைக்குள் திணித்த செல்வம் அதே பையிலிருந்து இரண்டு ஒற்றை ரூபாய்களை வெளியே எடுத்தான். அந்த இரண்டு ரூபாயையும் டாக்டரை நோக்கி நீட்டியவனாய்ப் பேசினான்.

''ஐயா, இந்த ரெண்டு ரூபாயை இப்ப வச்சுக்குங்க, பாக்கி ரூபா எவ்வளவோ அதை அப்புறமா நீங்க வரும்போது தர்றேன்.''

அவனையும், அந்த ரூபாயையும், மாறி, மாறிப் பார்த்த டாக்டர் இலேசாகப் புன்னகைத்தார்.

''ஐயா! சாயங்காலம் கண்டிப்பாகப் பாக்கித்துட்டைத் தந்துருவோம். இதுல ஒண்ணும் தப்பா நீங்க நினைக்காதீங்க. வாங்கிக்குங்க'' — பொன்னுசாமி பரிந்துரைத்தார்.

குடிசைக்குள் நுழையும்போதே அந்தக் குடும்பத்தின் நிலவரத்தை ஓரளவு புரிந்துவிட்டிருந்த டாக்டர், மனிதாபிமான உணர்வுடன், ''தம்பி! சாயங்காலமில்லே எப்ப உங்களால தர முடியுமோ அப்ப தாங்க வாங்கிக்கறேன். இல்ல தரவே முடியாட்டாலும் பரவாயில்லே. முதல்லே நான் எழுதிக் கொடுத்த மருந்தை வாங்க முயற்சி பண்ணு. இப்ப இந்த ரூபாயை வச்சுக்க. நான் வர்றேன்'' என்று கூறி விட்டுப் போனார்.

''தாத்தா! இப்ப மருந்துக்குத் துட்டு வேணுமே என்ன செய்யலாம்?—''

''நீயும் அம்மாவும் வேலை செய்யற ரைஸ் மில்லுல போயி முதலாளி கிட்ட, எங்கம்மாவுக்கு உடம்பு சரியில்ல ஒரு பத்து ரூபா மருந்து வாங்க வேணுமுன்னு கேட்டு வாங்கு. அப்புறமா நீங்க வேலை செஞ்சு அதைக் கழிச்சுருலாம்'' — பொன்னுசாமி யோசனை சொன்னார்.

'சரி தாத்தா' — என்ற ஒரே வார்த்தையை மட்டும் உதிர்த்துவிட்டு மில் முதலாளியைப் பார்க்கச் செல்வம் கிளம்பிப் போனான்.

பொன்னுசாமியின் கண்கள் குளமாயின. தன் ஒரே மகள் லட்சுமியின் பரிதாபகரமான வாழ்வை எண்ணி.

லட்சுமி தாயைப் பிரிந்த நாளிலிருந்து தாய்க்குத் தாயாகக் கண்போல் காத்து வளர்த்தது தந்தை பொன்னுசாமிதான். அவள் ஆளான மறு வருஷத்திலேயே அவளுக்கு மணம் முடித்து வைத்தார். உள்ளூர் மருமகனை கோபால் ஒரு 'டிரைவர்'. இதே ஊரில் ஓர் 'எஸ்டேட்' முதலாளிக்கு வண்டி எடுத்துக்கொண்டிருக்கிறான்.

திருமணத்துக்குப் பின்பு தான் கோபாலைப் பற்றிய விவரங்கள் பொன்னுசாமிக்குத் தெரிய வந்தது. அவன் ஒரு குடிகாரன் மட்டுமல்ல. கூத்திக் கள்ளனும் கூட. தினமும் குடித்து விட்டு வந்து லட்சுமியை அடிப்பதும், பண்ட பாத்திரங்களை நொறுக்குவதுமாய்க் கலாட்டா செய்து வந்தான்.

இந்த நிலையில் செல்வம் பிறந்தான். ஒருகுழந்தை பிறந்த பின்பும் கூட அவனது காலித்தனங்கள் குறைந்தபாடில்லை.

**அண்ணாதாசன்**

# உயிருக்கும் விலை உண்டு

நாளுக்கு நாள் நரக வாழ்வை அனு பவித்துக் கொண்டிருந்தாள் லட்சுமி.

இந்தச் சூழ்நிலையில் ஆசைநாயகி களாய் வைத்திருந்த ஒருத்தியை இரண்டாந் தாரமாய் மணந்து கொண்டு அவளுடன் நிரந்தரமாய்ப் போய் விட்டான்.

நான்கு ரூபாய் தினக்கூலிக்கு ரைஸ் மில்லில் வேலை செய்து அதை வைத்துக் குடும்பத்தைத் தள்ளிக் கொண்டிருந்தாள் லட்சுமி.

லட்சுமி மீது இரக்கப்பட்டு, செல்வத்தைத் தனக்கு எடுபிடியாக மாதம் 30 ரூபாய் சம்பளத்தில் வைத்துக் கொண்டார் ரைஸ் மில் முதலாளி. கூப்பிட்ட வேலைக்குச் சென்று கொண்டிருந்த பொன்னுசாமியின் கண்கள் பார்வை குறையத் தொடங்கப் பாரமாகி விட்டார் மகளுக்கு.

செல்வத்தை எப்படியெல்லாமோ வாழ வைக்க வேண்டுமென்று அவள் கற்பனை பண்ணியிருந்தாள். அத்தனையும் விதியின் விளையாட்டில் தவிடுபொடியாய்ப் போய் விட்டது.

அரிச்சுவடியைக் கூட அவன் ஒழுங்காய்ப் படிக்கவில்லை. இல்லை... வறுமை படிக்க விடவில்லை.

**ரை**ஸ் மில்லை விட்டுத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டே செல்வம் வெளியே வந்தான்.

''அதிகப் பற்றாய் வாங்கிய பழைய ரூபாயே ஏழெட்டு பாக்கி கெடக்கு. அதையே பிடிக்க முடியலே. இன்னும் வேற பணம் வேணுமாக்கும்?... நல்ல ஆளு லேய்... தாயும் புள்ளையும். நீங்க வேலைக்கு வந்தாலும் சரி, வராட்டாலும் சரி, துட்டு மில்லே. ஒண்ணுமில்லே.''

தோல்வியினாலும் பசி மயக்கத்தினாலும் அவன் வழியில் மரநிழலில் கிடந்த கல்லின் மீது இருந்து கொண்டு இளைப்பாறினான்.

பணத்துக்கு என்ன செய்யலாம் என்பதி லேயே அவன் தன் சிந்தனையை ஓடவிட்டுக் கொண்டிருந்தான்.

பொறி தெறித்தாற்போல் பளிச்சிட்டது— பழைய ஞாபகம் ஒன்று.

**அ**ன்று, ரைஸ்மில்லில் வேலை செய்து விட்டுப் போக்குவரத்து அதிகமுள்ள அந்த மெயின் ரோட்டின் வழியே செல்வமும்,



லட்சுமியும் வந்து கொண்டிருந்தார்கள். பின்னால் வந்த கார் ஒன்று ஒலியெழுப்ப, அந்தச் சத்தம் கேட்டு, மிரண்ட செல்வம் அங்குமிங்குமாய் ஓட, 'கிரீச்... கிரீச்....' என்ற சத்தத்துடன் செல்வம் தூக்கியெறியப் பட்டான்.

மண்டையில் ஒரு வெட்டு. கை,கால்களில் வழிப்பு. மண்டையிலிருந்து இரத்தம் வழியத் தொடங்கியது. அவன் நனையும் படிக்கு ரத்தம் பெருக்கெடுத்து ஓடியது.

லட்சுமி 'குய்யோ–முறையோ' என்று கத்தி அழ ஆரம்பித்து விட்டாள்.

அந்தக் காரின் டிரைவரும், பின்னிருக்கையில் இருந்து ஒரு வெள்ளை வேட்டி மனிதரும் ஒரே சமயத்தில் காரைவிட்டுக் கீழே இறங்கினார்கள்.

''அம்மா! நீ இந்தப் பையனோட தாய் தானே?'' என்று கார் முதலாளி கேட்டார்.

தலையசைத்தாள் லட்சுமி.

''உடனே பையனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயாகணும். இரண்டுபேரும் காருலே ஏறுங்க... ம்... ம்... சீக்கிரம்''– கட்டளையாய்ச் சொன்னார் கார் முதலாளி.

காரின் கதவுகளை அவர் திறந்துவிடத் தாயும், மகனும் காரின் பின்னிருக்கையில் போய் இருந்து கொண்டனர்.

வேடிக்கைக் கூட்டம் கூடும் முன்பாகக் கார் அதை விட்டுக் கிளம்பியது.

மண்டையில் தையலும், கை,கால்களில் கட்டுக்களும் போடப்பட்டன.

சிகிச்சைக்கான செலவுத் தொகையைக் கார் முதலாளி கொடுத்தார். எல்லோருமாய் ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தனர்.

அவளையும், செல்வத்தையும் சமாதானப் படுத்திக் கொண்டே ஜிப்பாப் பைக்குள் கையை விட்டு 'மணிபர்ஸை' வெளியே எடுத்தார். அதிலிருந்து ஒரு நூறு ரூபாய்த் தாளை உருவி லட்சுமியிடம் நீட்டினார்.

லட்சுமி பிரமிப்புடன் ''எதுக்குங்க இந்தப் பணம்?'' – என்று ஆரம்பித்து என்னவெல்லாமோ சொல்லிப் பணத்தை வாங்க மறுத்தாள்.

அவர், வற்புறுத்தலாய்ச் செல்வத்தின் கையில் ரூபாயைத் திணித்து விட்டு வண்டியில் போய் ஏறிக் கொண்டார். அவரின் சிறு கையசைப்புடன் கார் கிளம்பியது.

நிழலில் இருந்த செல்வம் ஒரு முடிவுக்கு வந்தவனாய் அதை விட்டு எழுந்தான்.

'டவுசர்' பைக்குள் கையை விட்டுத் துளாவி அந்த மருந்துச் சீட்டை எடுத்து மீண்டும் ஒருமுறை பார்த்துக் கொண்டான்.

நடந்தான்... வேகமாய் நடந்தான்.

வடக்கு ரோட்டில் தூரத்தில் ஓர் 'அம்பாஸிடர்' வந்து கொண்டிருந்தது.

வேகம் குறைந்து வரும் அந்தக் காரைக் கண்ட செல்வத்துக்கு மிகுந்த தன்னம்பிக்கை. ஆபத்தொன்றும் வந்துவிடாது என்ற அழுத்தமான நெஞ்சத் துணிவு.

கார் அருகில் வரவும் 'விருட்'டென்று ரோட்டின் குறுக்கே பாய்ந்தான்.

'அம்மா...!'– என்ற அந்த ஒரே ஒரு அலறலில் பஜாரே ஸ்தம்பித்து விட்டது.

குருதியைச் சந்தனமாய்ப் பூசிக்கொண்டது அந்த ரோடு.

அம்பாஸிடர் ஓர் உயிரைப் பலி வாங்கிய திருப்தியுடனும், கம்பீரத்துடனும் நின்று கொண்டிருந்தது.

விபத்துக்குள்ளாகி, சின்னாபின்னமாய்ச் சிதைந்து கிடப்பது தன் மகன்தான் என்று அறியாத அந்தக் கார் டிரைவர் கோபால் உணர்விழந்த பிண்டமாய்க் கீழே இறங்கி நின்றான்.

அதற்குள் அங்கே ஒரு கூட்டமே முளைத்து விட்டது.

காரின் கண்ணாடிகள் நொறுங்குண்டு சிதறின. டிரைவர் கோபால் தர்ம அடிகளைத் தாங்க மாட்டாமல் கீழே சாய்கிறான். எதேச்சையாய் அங்கு வந்த 'போலீஸ்' ஒருவரால் கோபால் உயிர் காக்கப்பட்டது!

அந்தக் கூட்டத்தில் அனுதாபத்துடன் ஒருவர் இப்படிக் கூறினார்: ''இந்தப் பிள்ளையைப் பெத்தவளும், பெத்தவனும் இந்தத் துக்கத்தை எப்படித்தான் தாங்கப் போறாங்களோ?''

அம்மாவுக்காகச் செல்வம் ஆபத்தை அணைத்துக் கொண்டதும், அவனைக் கொன்ற பழியை அப்பனே ஏற்றான் என்பதும் அந்தக் கூட்டத்தில் யாருக்கும் இப்போது தெரியாது!

---

''உலகம்தான் கலாசாலை. சமூக சேவைதான் நாம் படிக்கும் படிப்பு: நல்லொழுக்கமும், நற்பண்பும்தான் நாம் வாங்கும் மதிப்பெண்கள். என் பிள்ளைகள் உலகப் பள்ளிகளில் படித்து வெற்றி பெற வேண்டும் என்றே விரும்புகிறேன்.'' – மகாத்மாகாந்தி

—ஏ. தமிழ்ச் செல்வம்
ஏ. எம். ஐ. ஈ. முதல் ஆண்டு
ஸி. ஐ. இ. டி. கோவை






# At last ! A cassette that won't damage your recording head

Philips, the inventors of the world's first cassette bring you a world-class cassette.

**International quality tape**

Tape that won't snap or tear or stretch; a smooth and even coating; superior tonal response; high signal-to-noise ratio. With a precision mechanism to prevent jamming and snapping of tape.

Ask for it at your Philips dealer today.




Also Philips Ferro Popular at a popular price.

**PHILIPS**

*PHILIPS—the trusted Indian household name for over fifty years.*

OBM/9435

அண்ணாமலையில் சென்னை பல்கலைக் கழகம் தடபுடலாகத் தனது 125வது ஆண்டினைக் கொண்டாடியது. ரொம்ப மகிழ்ச்சி. ஆனால் கல்வி போதிக்கப்படும் முறை பெருமை சேர்ப்பதாக இருக்கிறதா?

எஸ். எஸ். சுப்ரமணியம்
புதுக் கல்லூரி, சென்னை



எஸ். எஸ். சுப்ரமணியன்

● வேலை வாய்ப்புக்கான கல்வி இப்போது பல்கலைக் கழகங்களில் சொல்லித் தரப்படுவ

# சொல்கிறார்கள்

இல்லை. ஜாப் ஓரியண்ட் எஜுகேஷன் என்றால் மிகப் பெரும்பாலான பட்டதாரிகளுக்கு உடனே வேலை வாய்ப்புக் கிடைக்கும். இப்போது பாருங்கள், ஆபீஸ். அட்மினிஸ்ட்ரேஷன்என்றுஒரே ஒரு சர்ட்டிபிகேட் கோர்ஸ் மட்டும்தான் இருக்கிறது. மாணவனின் நாட்டம் இருக்கிற துறையில் அவன் பயிற்சி பெற வகுப்புகள் இருந்தாலன்றி இந்தக் குறை நீங்காது.

கல்லூரிகளில் டிஸிப்ளின் இல்லை என்று ஒட்டு மொத்தமாகச் சொல்வதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். நியாயமான காரணம் இருக்கிற பட்சத்தில் மாணவர்கள் ஸ்ட்ரைக் செய்தால் நான் பங்கேற்கத் தயார்.



எம். டி. சுஜாதா

ஜி. ராஜசேகரன்



கே. குமாரசாமி



ஆனால் எடுத்ததற்கெல்லாம் ஸ்ட்ரைக் செய்வதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன்.

இந்தக் கம்யூனிடி பேஸிஸ் வைத்து அட்மிஷன் கொடுப்பதை உடனடியாக நிறுத்த வேண்டும். பல மாநிலங்களில் இந்த முறை அறவே இல்லை. சில புரொபஷனல் காலேஜ்களில் என்ட்ரன்ஸ் எக்ஸாம் வைத்துத் தேர்ந்தெடுக்கின்றனர். இதை மற்றக் கல்லூரிகளிலும் கடைப்பிடிக்கலாம்.

எம். டி. சுஜாதா
ராணி மேரி கல்லூரி, சென்னை

● இப்போது செமஸ்டர் முறையில் இன்டர்னல் அஸெஸ்மென்ட் இல்லாமலே 'போய் விட்டது. இது இருந்தால் அதிக மதிப்பெண்கள் பெற முடியும். இப்போது தியரியில் தான் மார்க் வாங்க வேண்டியிருக்கிறது. அடுத்த வருஷத்திலிருந்து செமஸ்டர் முறையையே எடுத்துவிடப் போகிறார்களாம்! க்ஷண சித்தம் க்ஷணப் பித்தம். இன்டர், பி.யூ.ஸி., ப்ளஸ் டூ என்பது போல் கல்வித் துறையில் எதை எதையோ செய்து விளையாடுகிறார்களே தவிர உருப்படியாக ஏதும் நடப்பதில்லை. அன்றைய பாடத்துக்கான புத்தகம் கொண்டு

வரவில்லை என்றும் நிர்த்தாட்சண்யமாக ஆப்சன்ட் போட்டு விடுகிறார்கள். அதனால் தினமும் கல்லூரிக்குப் போயும் அட்டென்டென்ஸ் குறைந்து விடுகிறது! இன்னொன்று: கல்லூரிகளில், குறிப்பாக, பெண்கள் கல்லூரிகளிலே இடத்துக்கு விண்ணப்பம் செய்தால், உண்டு — இல்லை என்று சொல்லாமல் இழுத்தடிக்கிறார்கள். எனக்குத் தெரிந்து ஒரு பெண் இரண்டு மாதமாக நடையாய் நடந்தாள். கடைசியில் சீட் இல்லை என்றார்கள்!

செமஸ்டர் பீஸை எல்லாம் நாலு மாதத்துக்கு முன்னாலேயே கட்டச் சொல்கிறார்கள். பரீட்சைபீஸையும் அதிகமாக்கி விட்டார்கள்.

**ஜி. ராஜசேகரன்**
**பச்சையப்பன் கல்லூரி, சென்னை**

● பி. காம் படிப்புக்கு இன்னும் அதிக இடங்கள் ஒதுக்க வேண்டும். (பெண்கள் கல்லூரிகளிலும்தான்) பிளஸ்-டூவில் ஆடிட்டிங் அண்ட் அக்கவுண்டன்ஸி குரூப் எடுத்த மாணவர்களுக்கு பி. காம் ஸீட் கிடைப்பதில்லை. ஆனால் கணிதம் எடுத்தவர்களுக்குக் கொடுக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட சதவீதம் ஆடிட்டிங்-அக்கவுண்டன்ஸி மாணவர்களுக்கு என்று ஒதுக்கினால் என்ன?

கல்வி முறையின் அடிப்படை நோக்கையே நாட்டின் துரித முன்னேற்றத்துக்கு உதவு படியாக மாற்றி அமைக்க வேண்டும்.

மாணவர்களுக்கு கைடன்ஸ் பீரோ இருக்கிறது பல்கலைக் கழகத்தில். ஆனால் ஒரு புரோகிராமும் நடக்காமல் இருந்தால் எப்படி? மற்ற கல்லூரிப் பிரதிநிதிகளைச் சந்தித்து, கலந்துரையாடவும் வாய்ப்பு வசதி இல்லை. பல்வேறு ஸ்காலர்ஷிப்புகளுக்கு, சரியான கோர்ஸ்களுக்குத் தகுதியான மாணவர்களைத் தேர்வு செய்யலாம். சில கல்லூரிகளில் வேண்டுமானால் கல்வியின் தரம் குறைந்திருக்கலாம். ஆனால் சில ஆராய்ச்சித் துறைகளில் மிக உயர்ந்த — ஏன் அமெரிக்காவின் தரத்தை எட்டியிருக்கிறோம். ஏனோ திடீரென்று ஆராய்ச்சித் துறை மாணவர்களுக்கு ரிஜிஸ்ட்ரேஷன் தொகை, விருப்பவிஸ்தொகை இரண்டையும் 500 ரூபாயாக உயர்த்தி விட்டார்கள்! மாணவர்களின் கஷ்டம் பல்கலைக் கழகத்துக்குத் தெரியாமல் போய்விட்டதே!

சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளர்
**திரு சி. கே. குமாரசாமி**
*(தமது பத்து வருடப் பதவிக் காலத்தில் ஐந்து துணைவேந்தர்களுடன் பணியாற்றியவர்):*

● கல்வியாளர்கள் யாரும், வேலை வாய்ப்பை அடிப்படையாகக் கொண்ட கல்விதான்வேண்டும் என்ற கொள்கை உடையவர்கள் அல்ல. கல்வி எதற்கு? அறிவும், தனி மனித நலன்களும், மேம்பாடும் பெறவே கல்வி தேவை. லீடர்ஷிப் க்வாலிடி கல்லூரியில்தான் உருவாகிறது. இப்படி, எல்லாம் சேர்ந்த ஒரு மித்த பயன் தருவதே கல்வி. வேலை வாய்ப்புக் கல்வி இல்லை என்று எப்படிச் சொல்ல முடியும்? ப்ளஸ் டூ அளவிலும், என்ஜினியரிங், கம்ப்யூட்டர் சயன்ஸ், பாலிடெக்னிக், பாலிமர் சயன்ஸ், ஆர்கானிக் சயன்ஸ், அனலடிக்கல் சயன்ஸ் என்று எவ்வளவோ துறைகள் இல்லாமலா போய் விட்டன?

பி.எச்.டி.க்கு ரிஜிஸ்டிரேஷன் தொகை அதிகமாக்கியது வருத்தப்படக்கூடிய விஷயம் தான். எல்லா விலைவாசிகளும் ஏறிவிட்ட இந்தக் காலத்தில் இது தவிர்க்க முடியாது. ஆனால் இதைக் குறைக்க வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆராய்ச்சிக்கு உதவித் தொகை வழங்க வேண்டும். பல்கலைக் கழகத்தின் நிதி வசதிக் குறைவு காரணமாக பீஸ் அதிகப்படுத்த வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாகியிருக்கிறோம். எலிமெண்டரி எஜுகேஷன் செஸ் இருப்பது போல் ஹையர் எஜுகேஷன் செஸ் இருந்தால், பல்கலைக் கழகத்துக்கு நிதி வசதி பெருகும். அல்லது மாநில அளவிலான பல்கலைக் கழக மான்யக் குழு உருவாக வேண்டும். தேர்ந்த கல்விமான்களைக் கொண்டு இதை நிர்வகிக்கலாம். மாநிலஅளவில் ஆராய்ச்சிக்கவுன்ஸில் தனித்து இயங்க வழி வகை செய்ய வேண்டும். சமுதாயப் பிரச்னைகள் நிறைய உள்ளன. அவற்றை அலசும் வகையில் ஆராய்ச்சிகள் அமையலாம்.

கல்வியின் தரம் குறைந்து விட்டது என்பது பொதுவாகச் சொல்லப்படும் கருத்து. எதை வைத்துச் சொல்கிறார்கள்? அளவிடும் கருவி என்ன? ஐ. ஏ. எஸ்., ஐ. பி. எஸ்.ஸில் நம்மவர்கள் வரவில்லை என்கிறார்கள். மற்ற மாநிலங்கள் முன்பெல்லாம் கல்வியில் அவ்வளவாக அக்கறை காட்டவில்லை. இப்போது அவர்களும் அவசியத்தை உணர்ந்து ஆர்வத்துடன் பங்கு கொள்கிறார்கள். இப்போதும் கூட நமது பட்ட மேற்படிப்பு அல்லது ஆராய்ச்சி மாணவர்களை யு. எஸ்., யு.கே., ஜெர்மனி ஆகிய நாடுகள் விரும்பி வரவேற்கின்றன.

தொகுப்பு: சாருகேசி

அமெரிக்கர்கள் தாங்கள் அனுப்பும் தந்தியில் ஒரே ஒரு வார்த்தையைச் சேர்ப்பதால், தபால் தந்தி இலாகாவுக்கு ஆண்டுதோறும் 10 கோடி ரூபாய் கிடைக்கிறது. அப்படிப்பட்ட வார்த்தை என்ன தெரியுமா? 'Please' என்ற சொல்தான்.

—தெ. நாராயணமூர்த்தி
இறுதியாண்டு (இயந்திரவியல்)
மோதிலால் நேரு அரசினர் தொழில் நுட்பக் கல்லூரி பாண்டிச்சேரி



# பொறுமையோடு பார்த்த பொருட்காட்சிகள்

**சென்னைப் பல்கலைக்கழகத்தின் 125வது ஆண்டு நிறைவு விழாவை யொட்டி சென்னையில் மூன்று கல்லூரிகளில் 'கண் காட்சி. மூன்றையும் பார்த்து முடிப்பதற் குள் மூச்சு வாங்கத்தான் செய்கிறது!**

**மாநிலக் கல்லூரி:**

சூரிய சக்தியை இயங்கும் சக்தியாக மாற்றி இரயில்வே 'ஸிக்னலிங்' வேலை செய்வதைச் சோதனைமுறையில் சேலம் அருகேயுள்ள கருப்பூர் இரயில் நிலையம் பகுதியில் செய்து பார்க்கிறார்கள். அதன் மாதிரி ஒன்றை வைத்து மின் சக்தியால் இயக்கிக் காண்பிக்கிறார்கள்.

இன்ஸாட் 1-பியின் மாதிரியும் பலரின் கவனத்தைக் கவர்கிறது. என்ன எப்படி என்று கேட்டுத் துளைக்கிறார்கள்.

பிறவியிலேயே பார்வையற்ற மாணவர் கலாநிதி வடிவமைத்துள்ள நேரக் கட்டுப்பாட்டு இயந்திரம் ஒன்றையும் குறிப்பிட வேண்டும். இந்தக் கருவியைக் குறிப்பிட்ட நேரத்தில் அலாரம் வைக்கிறமாதிரி செட் பண்ணிவிட்டால், அதன் மூலம் ரேடியோ, டி. வி., டேப் ரெகார்டர், ஏன் சாதாரண மின் விளக்குகள் என்று கூட குறிப்பிட்ட நேரத்தில் இயங்கப் பண்ணி விடலாம். ஃபைபர் கிளாஸில் செய்யப்பட்டுள்ள இந்தக் கருவியை நூற்றிருபது ரூபாய் விலையில் கிடைக்கச் செய்யலாம் என்கிறார் மாநிலக் கல்லூரி மாணவர் கணேஷ்ராஜ்.



○ விவேகானந்தா கல்லூரி கண்காட்சி இஞ்ஜினீர்ங் பிரிவில் முதல்பரிசு பெற்ற எம்.ஐ.டி மாணவர் திரு. எம். ரமேஷ் (புளியூர் பிரபா) திரு சகாய சைமன் ஆகியோர் பார்வையாளர்களுக்குத் தங்கள் தயாரிப்பை விளக்குகின்றனர்.

எலெக்ட்ரானிக் வாக்குப் பதிவு செய்யும் இயந்திரம் இயக்கிக் காட்டப்பட்டது.

தாவரவியல் பகுதி—ஒரு படம் கண்ணையும் கருத்தையும் கவர்கிறது. நம்முடைய அன்றாட வாழ்க்கையில் காலையில் கண் விழிப்பது முதல் இரவு படுக்கப் போகும் வரை எந்த எந்த வகையில் தாவரச் செல்வம் பயன்படுகிறது என்பதை விளக்குகிற படம் அது.



○ சைத்தானின் வாத்திய கோஷ்டி

**விவேகானந்தா கல்லூரி:**

பல கல்லூரி, பள்ளி மாணவர்கள் பங்கேற்ற இக் கண்காட்சியில் கந்தசாமி நாயுடு கல்லூரி மாணவர்கள் வடிவமைத்திருந்த மின்சார ட்ரான்ஸ்ஃபார்மர் ஒன்று குறிப்பிடப்பட வேண்டியது. அஸிட்டிக் அமிலத்தில் சிறிது சிறிதாகத் தண்ணீர் சேர்ப்பதன் மூலம் மின்சாரத்தின் கடத்தும் தன்மையை அதிகமாக்கும் கருவி இது. அமிலச் சிதைவு ஏற்பட்டால்தான் மின்சாரம் கடத்தப்பட முடியும்.

சமையல் அறையிலேயே முடங்கிக் கிடக்கிற பெண்கள் கூட உணவுப் பொருள் கலப்படம் பற்றிக் கண்டுகொள்ள உதவும் எளிய முறைகளை விளக்கி யிருந்தார்கள். பொது மக்களின் கவனத்தைக் கவர்ந்த பகுதி இது.

நட்சத்திர மண்டலங்களிலிருந்து (சூரியன் உட்பட) வரும் ரேடியோ அலைகளை வாங்கி ஒலிப்பதிவு செய்து காண்பித்தார்கள். விண் வெளிக் கூடம் - மாதிரி ஒன்றை வைத்து நட்சத்திரங்கள் பல்வேறு காலங்களில் உள்ள நிலைகளையும் வடிவங்களையும் விளக்கினார்கள்.

இளநீரில் உள்ள ஹார்மோனைப் பிரித்து எடுத்துப் போட்டால் கறிவேப்பிலைச் செடி அமோகமாக வளருமாம். விதைகள் முளைப்பதும் செடிகள் வளர்தலும் பற்றி விவேகானந்தா கல்லூரி வேதியியல் பிரிவின் ஏழு மாணவர்கள் விளக்கியது, பாமரர்களும் பயன் பெறும் விதமாக இருந்தது. முதல் பரிசும் இதற்குக் கிடைத்தது.

ஒளி புகும் இழை ஒன்று ஸிலிகா என்னும் பொருளில் தயாரிக்கப்பட்டது. இந்த இழையைக் கண்டபடி முறுக்கினாலும் சுருட்டி



மாநிலக் கல்லூரியில் உளவியல் ஆய்வு.

னாலும், இதன் வழியே 'இண்டர்னல் ரிப்ளக் ஷன்' முறையில் ஒளி ஊடுருவுமாம். இந்த ஒளி அலைகளின் மூலம் ஒலி அலைகளையும் அனுப்ப முடியுமாம். பூனே (...லிபோன் துறையில் இதைச் சோதனை முறையில் செய்து பார்க்கிறார்களாம். வேகமாகத் தகவல்களை அனுப்ப உதவப் போகிற இந்த ஒளி புகும் இழை சிக்கனமானதும் கூட என்கிறார்கள்.

**சென்னை மருத்துவக் கல்லூரி:**

மாணவர் டாக்டர் ரமேஷ் சந்தர் சுற்றிக் காட்டி விளக்கமும் தந்தார்:

- 23459 என்பது மிக முக்கியமான டெலிபோன் நம்பர். இதயரீதியாக யாருக்காவது 'ஹார்ட் அட்டாக்' ஏற்பட்டால், உடனே இந்த எண்ணுக்கு போன் செய்ய வேண்டும். டாக்டருடன் ஒரு ஆம்புலன்ஸ் வீட்டுக்கே வந்து நோயாளியைத் தாமதமின்றிக் கவனித்து மருத்துவ மனைக்குக் கொண்டு வரும். இந்த இலவசமான பணி சென்னை, பொது மருத்துவ மனையில் செயல்படுகிறது.

- கையோ விரலோ துண்டாகி விட்டால் கவலைப்பட வேண்டாம். துண்டாகி விழுந்த பகுதியை உடனே காற்றுப் படாமல் பிளாஸ்டிக் கவரில் போட்டு ஐஸில் வைத்து, நோயாளியுடன் மருத்துவ மனைக்குக் கொண்டு வரவேண்டும். துண்டாகிப்போன ஆறு மணி நேரத்துக்குள் இப்படிக் கொண்டு வந்தால் இணைத்துத் தையல் போட்டு விடலாம். நூறு சதவீதப் பலன்.

- நாற்பது வயது என்பது இளமையின் முதுமை.
ஐம்பது வயது என்பது முதுமையின் இளமை
—விக்டர் ஹியூகோ

இப்படி ஒரு பொன் மொழி கண்ணில் பட்டது. 'முதியோர் மருத்துவத் துறை' என்று ஒரு பகுதி தொடங்கப்பட்டு ஐந்து ஆண்டுகளாகின்றன. திங்கள் வியாழன் கிழமைகளில் வயதானவர்களிடம் சிறப்பான கவனம் செலுத்தப்படுகிறது.

- கார்டியாலஜி பகுதியில் 'பேஸ் மேக்கர்' என்று ஒரு கருவியைக் காட்டுகிறார்கள். ஐம்பது கிராம் எடையுள்ள நவீனமான கருவி. இதயத் துடிப்பு சீராக இல்லாதவர்களுக்கு மார்பில் கீறிச் செருகி விட்டு மெலிதான குழாய் ஒன்றை இதயத்தோடு இணைத்து விடுவார்கள். இருதயத் துடிப்பை அப்புறம் இது தானே நிர்வகித்துக்கொள்ளும். விலை பன்னிரண்டாயிரம் ரூபாயாம். ஆனால் வருமான அடிப்படையில் இலவசமாகவும் குறைவான கட்டணத்திலும் இது பொருத்தப்படுகிறது. பன்னிரண்டு ஆண்டுகள் இது வேலை செய்யும். அப்புறம் புதிய ஒன்றைப் பொருத்திக் கொள்ளலாம்.

- பிசாசு சங்கீதம் பகுதியில் ஏக ஜன நெரிசல். செவிப்பறை கிழிந்து விடுகிறது. பார்வையாளர்களில் ஒரு தாய் தன் குழந்தையுடன் உள்ளே வந்து மிரண்டு போய், ''கண்ணை மூடிக்கோ... பயமாயிருக்கும்'' என்று சொல்கிறாள். ''வெறும் எலும்புக் கூடுதாம்மா... எனக்கென்ன பயம்'' என்கிறது குழந்தை. — ஆறு வயசு இருக்கும்.

- இருதய ஆபரேஷன் காட்சியை நிறையப் பேர் ரசித்துப் பார்த்தனர்.

தொகுப்பு : வெண்பால்

புகைப்படங்கள்:
விவேகா ஃபோட்டோ ஸ்ளப்



விவேகானந்தா கல்லூரி முதல்வர், ஆசிரியர்கள் மூன்றாவது பரிசு பெற்ற கருவியைப் பார்வையிடுகிறார்கள்.

# இன்சாட் இன்சாட் வா! வா!
# இனிய செய்தி சொல்லு வா!

அமெரிக்காவிலிருந்து செலுத்தப் பட்டாலும் இன்சாட் பல விதங்களில் ஓர் இந்திய சாதனையே. பல முதல் பெருமைகளை உடைய அதன்பணிகள் பெரும் பயன் தருபவை.



சுபயோக சுப தினத்தில் – ஆகஸ்டு 31ந் தேதி புதன்கிழமை இந்திய நேரப்படி சரியாகப் பிற்பகல் 1-19 மணிக்கு ''சேலஞ்சர்'' 18வது தடவையாக உலகைச் சுற்றி வந்தபோது, அமெரிக்க விண்வெளி வீரர்களில் ஒருவரான குயோன் புளூஃபோர்ட் ஒரு பொத்தானை அழுத்த, அந்த விண்வெளி வாகனத்திலிருந்து இன்சாட் 1-பி வெளி வந்தது.

சேலஞ்சரிலிருந்து வெளிப்பட்ட இன்சாட் 1-பி பூமியைச் சுற்றிவந்தது என்றாலும் அச்சுற்றுப் பாதை தாற்காலிகமானதே. இச் செயற்கைக் கோள் எப்போதும் பூமியிலிருந்து சுமார் 35,786 கி. மீ. உயரத்தில் அமைந்த வட்ட வடிவப் பாதையில் பூமியைச் சுற்றி வருவது அதன் நிரந்தரச் சுற்றுப் பாதை ஆகும். செயற்கைக் கோளில் உள்ள எரி பொருள்களைப் பயன்படுத்தும் 'உந்து விசை மோட்டாரை' இயக்கித் தாற்காலிக சுற்றுப் பாதையிலிருந்து படிப்படியாக அதனை நிரந்தரச் சுற்றுப் பாதைக்கு மாற்ற வேண்டும். பூமி தனது அச்சில் 24 மணி நேரத்துக்கு ஒரு முறை சுற்றும். இன்சாட் 1-பி அவ்வளவு தொலைவிலிருந்து பூமியைச் சுற்றும்போது பூமிக்கு இணையான வேகத்தில் சுற்றும். ஆக, அக்கோள் எப்போதும் ''நிலையாக'' இந்தியாவை நோக்கியபடி இருக்கும்.

## இன்சாட் 1-பியின் பணிகள்

1. இந்தியா பூராவுக்கும் ஒரே சமயத்தில் டெலிவிஷன் நிகழ்ச்சிகளை, ரேடியோ நிகழ்ச்சிகளை ஒளி, ஒலிபரப்புவது.

2. டெலிபோன் தொடர்புகளை அளிப்பது.

3. இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் கடல் பகுதிகளிலிருந்தும் வானிலைத் தகவல்களைச் சேகரித்து அனுப்புவது.

4. புயல், வெள்ளம் போன்ற அபாயம் ஏற்பட்டால் அதற்கான அறிகுறிகளை முன் கூட்டியே படம் பிடித்து அனுப்புவது போன்ற காரியங்களுக்கு முக்கியமாகப் பயன் படும்.

## முதல் பெருமைகள்

- அமெரிக்க விண்வெளி வாகனத்தில் ''வர்த்தக முறை''யில் விண்ணில் கொண்டு செல்லப்பட்ட 'முதல்' செயற்கைக் கோள் இன்சாட் 1-பி.



● அமெரிக்கா, ரஷ்யா எவ்வளவோ துணைக் கோள்களைப் பறக்க விட்டாலும் டெலிபோன் தொடர்பு, வானிலைத் தகவல் தொடர்பு போன்ற பல காரியங்களுக்கு ''ஒரே சமயத்தில்'' பயன்படுகிற ''முதல்'' செயற்கைக் கோள் உலகில் இதுவே.

● இன்சாட் 1-பி கலத்தை சேலஞ்சர் விண் வெளி ஓடத்திலிருந்து விண்ணில் செலுத்திய குயோன் புளூபோர்ட் அமெரிக்க நீக்ரோ இனத்தின் ''முதல்'' விண்வெளி வீரர்.

● அமெரிக்க விண்வெளி வாகனத்தின் எட்டு விண்வெளிப் பயணங்களில் ''முதல் முறையாக'' இரவில் ஏவப்பட்ட செயற்கைக் கோள் என்னும் பெருமையை இன்சாட் கோளே பெற்றது.

இப்படிப் பல ''முதல்'' பெருமைகளை நமது இன்சாட் 1-பி கலம் தட்டிக்கொண்டு சென்று விட்டது.



### சொந்தமாக "இன்சாட்"

''இன்சாட்'' ரக செயற்கைக்கோள்களைச் சொந்தமாகத் தயாரிக்க 'இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிலையம்' திட்டமிட்டுள்ளது. முதல் படியாக, இந்தியா முன் மாதிரி ''இன்சாட்'' ஒன்றைத் தயாரிக்கும். (இன்சாட் 1-சி) 'இந்திய டிசைன்களின்படி இந்தியாவிலேயே தயாரிக்கிற இன்சாட் எவ்விதம் செயல்படுகிறது?' என்பதை அறிவதே இதனைத் தயாரிப்பதன் முக்கிய நோக்கமாக இருக்கும். இதுவும் வெளிநாட்டிலிருந்துதான் செலுத்தப்படும்.

இன்சாட் 1-ஏவை விண்வெளியில்செலுத்த ஆன செலவுடன் ஒப்பிடுகையில் இன்சாட் 1-பிக்கான செலவு மிகவும் குறைவு.

### குறைந்த செலவில்...

இன்சாட் 1-ஏவை விண்ணில் செலுத்த நாஸா (அமெரிக்க தேசிய வானவியல் விண்வெளி நிர்வாகம்) இந்தியாவிடம் ரூ. 26 கோடியைப் பெற்றுக் கொண்டது.

ஆனால் தற்போது ''மிகவும் வெற்றிகரமாக'' விண்ணில் செலுத்தப்பட்ட ''இன்சாட் 1-பி'' செயற்கைக் கோளுக்கு நாஸா நம்மிடம் சுமார் 11 கோடி மட்டுமே வாங்கியது. ஏனெனில் ஒரு செயற்கைக் கோளைச் செலுத்த ராக்கெட்டைப் பயன்படுத்தினால் ராக்கெட்டின் ஆயுட்காலம் அத்துடன் சரி.

ஆனால் இன்சாட் 1-பியை ''சேலஞ்சர்'' விண்வெளி ஓடம்தான் செலுத்தியது. சேலஞ்சரை மீண்டும் மீண்டும் அடுத்தடுத்த செயற்கைக் கோள்களைச் செலுத்தப் பயன்படுத்தலாம்.

இன்சாட் 1-பியை அமெரிக்க நிறுவனம் தயாரித்து அமெரிக்கா விண்வெளிக்கு அனுப்பியபோதிலும் அந்தச் செயற்கைக் கோள் முழுக்க முழுக்க இந்திய நிபுணர்கள் கூறிய டிசைன், தேவைகள் ஆகியன அடிப்படையில் அமெரிக்க போர்ட் ஏரோ ஸ்பேஸ் மற்றும் தகவல் தொடர்பு கார்ப்பரேஷனுள் ''காண்ட்ராக்ட்'' அடிப்படையில் தயாரிக்கப்பட்டது என்பது நமக்கும் பெருமையே. விண்வெளித் துறையில் மேலும் பல பெருமை மிக்க சாதனைகள் பாரதத்தின் செயல் திறனை எதிர்நோக்கிக் காத்திருக்கின்றன.

-என். ரவி,
பி.காம். முதல் ஆண்டு (அஞ்சல் வழி)
மதுரை காமராஜ் பல்கலைக் கழகம்

---



ஒருவர்: உங்களை விட்டுப் போன செல்வம் திரும்பக் கிடைக்கும் என்று ஜோசியர் சொன்னாரே கிடைத்து விட்டதா?

எழுத்தாளர்: ஆமாம். நான் பத்திரிகைக்கு அனுப்பிய கதை எனக்கே திரும்பி வந்து விட்டது.

—அ. தங்கவேல்
இளங்கலை புள்ளியியல் முதலாண்டு
பூசாகோ கலை அறிவியல்கல்லூரி, கோவை

○ எம். சம்பத், வேலாயுதம் பாளையம்

? குற்றவாளியைத் திருத்துவதற்கு வாய்ப்பளிப்பதுதானே தண்டனையின் நோக்கம்? பிறகேன் மரண தண்டனை?

! கருணைக்கடலே! தூக்குத் தண்டனையைக் கொலை செய்த எல்லாரும் பெறுவதில்லை. தற்காப்புக்காகவோ உணர்ச்சிவசப்பட்டோ அல்லது மனநோய் காரணமாகவோ செய்யப் படும் கொலைகளுக்குக் குறைந்த தண்டனையோ, விடுதலையோ கிடைக்கும். திட்டமிட்டு வன்மத்துடன் செய்யப் படும் கொலைகளுக்கே மரண தண்டனை. இது அவசியமே. இல்லாத போனால் மனித உயிர் மலிவாகி விடும்.

○ ஆர். சிவராஜ், லால்குடி

? சுப்ரீம் கோர்ட் பெஞ்ச் குழு தூக்குத் தண்டனை செல்லும் எனத் தீர்ப்பளித்திருப்பது பற்றி...?

! மின்சார நாற்காலிகளில் அமரச் செய்தல், சுட்டுக் கொல்லப்படுதல், ஊசி மருந்து ஏற்றுதல்போன்ற மரண தண்டனையை நிறைவேற்றும் இதர முறைகள் தூக்கு மாட்டுதலை விடக் குறைவான துன்பத்தைக் குற்றவாளிக்குத் தருவதாக நிருபணமாகவில்லை என்ற நீதிபதிகள் தீர்ப்பு உலக அபிப்பிராயத்துடன் ஒத்துப் போகிறது. அவர்கள் இதைக் கூறியதுடன் நிற்கவில்லை. தூக்குத் தண்டனை நிறைவேற்றப் படும்போது குற்றவாளிக்குச் சிரமம் மிகக் குறைந்த அளவில் இருக்குமாறு மனிதாபிமானத்துடன் கவனித்துக் கொள்ள வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இது சிறை அதிகாரிகள் கவனத்துக்கு.

○ எஸ். சங்கர், சென்னை-39

? எம். ஜி. ஆருக்கு டாக்டர் பட்டம் கொடுக்கப்பட்டது நியாயமானதா?

! கொடுத்தது நியாயம்: கொடுக்கப்பட்ட விதம் தான் மனக் கசப்பை ஏற்படுத்துகிறது.

○ பூமா வாசுதேவன், ஸ்ரீரங்கம்

? அ.தி.மு.க.வுடன் தோழமை கொண்டுள்ள இந்திரா காங்கிரஸால் சட்டசபையில் சிறந்த எதிர்க் கட்சியாகப் பணியாற்ற முடியுமா?

! முடியாது என்பதால் தான் கருணாநிதி ராஜினாமா செய்தது தவறு என்கிறேன். தமிழ் மக்களுக்கு வெளியே யிருந்து அவர் செய்யும் பணிசனை விடச் சட்டசபைக்குள் ளிருந்து அது அளிக்கும் உரிமைகளுடன் பணியாற்றுவதுதான் அதிகமான பலன் தரும். இதைப் புரிந்து கொண்டிருந்தும் பெங்களூர் ப. மூர்த்தி என்மேல் எதற்காகவோ பாய்கிறார்.

○ என். சக்திவேல், பழனி

? ஒரு நாள் கிரிக்கெட் மாட்சுகளில் பாகிஸ்தானை நமது அணி தொடர்ந்து வென்று வருவது பற்றி....?

! எனக்கு ரொம்ப வருத்தம் ஸார்! பாருங்களேன், 21ம் தேதி இரவு செமை உதை வாங்கப் போகிறார்கள் என்று தீர்மானித்து ஆட்டத்தில் சுவாரஸ்யம் இழந்து டி.வியை நிறுத்தி விட்டு கொர்... கொர்... மறு நாள் காலை நானிதழ்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ள ...எனக்கு வருத்தமாயிருக்காதா, பின்னே. அதுவும் கீர்த்தி ஆஸாத், மதன் லால் மீது ரொம்பக் கோபம். நான் டி.வி. பார்க்காத போது அவர்கள் எப்படி வெளுத்துக்கட்டலாம்.

○ சிந்தாமணி ஜெகதீஷ், திருச்சி

? தமிழர் பிரச்னைக்குத் தீர்வு காண இலங்கை அரசு சில நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளா விட்டால் மிதவாதப் போக்குடைய இலங்கைத் தமிழர் கூட தீவிரப் போக்கை மேற்கொள்ளக் கூடிய நிலைக்குத் தள்ளப் படலாம் என்று இந்திரா காந்தி எச்சரித்துள்ளாரே?

! ஆயிரத்தில் ஒரு வார்த்தை. பின்னர் மிதவாதப் போக்குடைய இந்தியப் பிரதமர் கூட தீவிரப் போக்கை மேற்கொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளப்படலாம்.

○ ஆர். நாகராஜன், பரசலூர்

? சமீப காலச் செய்தியாக என். டி. ஆர். பற்றி ஏதாவது கூறுங்களேன்...?

! ஜோதிடர் யோசனைப்படி ஒரு காதில் குண்டலம் அணிகிறார்: பிரார்த்தனை



பிராட்மன்



கீர்த்தி ஆஸாத்



மதன்லால்

# எம்.ஜி.ஆருக்கு டாக்டர் பட்டம் தந்தது நியாயமா?

# நீங்கள் கேட்டவை

## —தராசு—

நிறைவேற்றப் புடவை உடுத்துகிறார். இறை யுணர்வு இருப்பது பற்றி மகிழ்ச்சி. ஆனால் சட்ட மன்றத்திலேயே பரிகா சத்துக்கு உள்ளாகும் அள வில் பகுத்தறிவுக்குப்



கோவி. மணிசேகரன்



துரைமுருகன்

பொருந்தாத செயல் களில் ஒரு முதல்வர் இறங்க வேண்டியதில்லை.

○ புரட்சிப் பித்தன், ஆத்தும்பாலம்

? தன் பெயர் மற்றவர்களுக்கு இருக்காது:இருக்கவும்கூடாது. இருந்தாலும் அந்தப் பெய ரில் எழுதக் கூடாது என்று கோவி மணிசேகரன் சீறி யிருக்கிறாரே?

! மணி சேகரன் என்ற பெயரில் வேறு ஒருவர் எழுதுவதும் அது பிரசுர மாவதும் சீற்றத்தைக் கிளப்புவது நியாயமே. இதற்கு அதிகமாக மணி சேகரன் என்ற பெய ருக்கு கோவி உரிமை கொண்டாடினால் அது அநியாயம்.

○ தா. கொழுந்துவேல் ★ நாகர்கோயில்

? இந்தியாவின் உள்நாட்டு விவ காரம் பற்றி ருஷ்யப் பத் திகை கடுமையான விமர் சனம் செய்துள்ளதாமே?

! சுதந்திர ஜனநாயக நாடு களில் பிற நாட்டு உள் விவகாரங்களைப் பத்திரி கைகள் விமரிசிக்கலாம். தவறில்லை. அரசு அதி காரத்தில் உள்ளவர்கள் தான் வேறு தேசங்களின் உள்நாட்டு விவகாரங் களில் தலையிடுவது போல் பேசக் கூடாது. இது கம் யூனிஸ நாட்டுக்குப் பொருந்தாது. காரணம் அங்கு பத்திரிகைகள் அர சின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியவை. எனவே ருஷ்யப் பத்திரிகையின் கடுமையான விமர்ச னத்தை நாம் கடுமை யாகக் கண்டிக்க வேண் டியதுதான்.

○ எஸ். வி. ராஜசேகர், சென்னை-5

? மிஸ் வில்லியம்ஸ் என்ற நீக்ரோ இளம் பெண் மிஸ் அமெரிக்காவாகத் தேர்ந் தெடுக்கப்பட்டது பற்றி?

! நீக்ரோக்களுக்குச் சம வாய்ப்புத் தருகிறோம் என்று உலகுக்கு உணர்த் துவதற்காக எனக்குச் சலுகை காட்டித் தேர்ந் தெடுக்கவில்லை, உண் மையில் அழகா யிருப்ப தால்தான் தேர்ந்தெடுக் கப்பட்டேன் என்று அவர் தன்னம்பிக்கையுடன் கூறியிருப்பதுஅவருடைய அழகை விடவும் அதிக மாக நம் கவனத்தைக் கவர்கிறது.

○ ரகுபதி, பேரளம்

? பிராட்மன்சாதனையை கவாஸ் கர் மிஞ்சுவாரா?

! மிஞ்சும்வரை அவருக்கு டெஸ்ட் வாய்ப்பு தந்து கொண்டேயிருப்பார்கள். கவலை வேண்டாம்!

○ கே. தேவிகா, திருச்சி

? டாக்டர் ராஜா ராமண்ணா அணு மின்நிலையங்களை அதிக அளவில் அமைய வேண்டும் என்கிறாரே? கல்கி தலையங்கத்தைப் படித்ததும் எழுந்த கேள்வியே இது.

! ராமண்ணா போன்றவர் களுக்குப் பதில் கூறு வதற்காக எழுதப்பட்ட தலையங்கமே அது!

○ லட்சுமி செங்குட்டுவன், சேலம்

? துரைமுருகன் செனட் தேர்தலில் வெற்றி பெற்றது பற்றி?

! எம். ஜி. ஆருக்கும் மற்ற வர்களுக்கும் கௌரவ டாக்டர்பட்டம் அளிக்கக் கையாளப்பட்ட முறை யைச் சாடி செனட் பேரவையின் சிறப்புக் கூட்டத்தைப் புயல் கள மாக்கவென்றே அவர் போய்ச் சேர்ந்த மாதிரி யல்லவா இருக்கிறது! செய்வன திருந்தச் செய் என்பதை மாணவருக் குப் போதித்தால் போதாது: பல்கலைக் கழக மும் பின்பற்ற வேண்டும்.

○ எஸ். வீராரம், தக்கலை (குமரி)

? நூறாண்டுகள் வாழ்வதை விட பௌத்த நெறிகளைப் பின்பற்றி ஒரு வருடம் வாழ்வதே மேல் என்று ஜெயவர்த்தனே கூறியிருப் பது குறித்து....?

! சமூ மக்களுக்குச் சரியான அறிவுரை. நமக்கு எடு படாமல் போகிறதென் றால் இதை ஜெயவர்த் தனே கூறுவதால்தான். இதை விடவும் காந்திய வாதி டாக்டர் அரிய ரத்னே பேச்சு நம்மனத்தை நெகிழ்விப்பதில் வியப் பில்லை: "நான் சிங் களனே. ஆகவே நடந்த நிகழ்ச்சிகள் குறித்துநான் வெட்கித் தலை குனி கிறேன். எனக்கு சொத்து பதவி ஏதுமில்லை. இழப் பதற்கு. ஆனால் புத்த மதம் அளித்துள்ள மிகப் பெரிய சொத்தை இழந்து விட்ட துக்கம் பீறிடு கிறது...."

★ ரூ. 10 பரிசு பெறுபவர்

தா. கொழுந்துவேல்
3, விசுவகர்மா வடக்குத் தெரு, கோட்டார்,
நாகர்கோயில்-629. 002

# தூய்மை காத்து மேன்மை அடைவோம்!

**அழகிய இந்தியாவை அசிங்கப் படுத்தக் கூடாது என்ற உணர்வு நம் ஒவ்வொருவருக்கும் ஏற்பட வேண்டும்.**

இன்றைய பரபரப்பான உலகில் மனிதன் சுவாசிக்கும் காற்று, குடிக்கும் தண்ணீர், உண்ணும் உணவு ஆகிய யாவுமே சுத்தமானதாக இருப்பதில்லை. இதற்கு முக்கிய காரணம் தொழிற்சாலைகள் மற்றும் வாகனங்கள் வெளியேற்றும் கழிவுப் பொருட்களே.

பெட்ரோலியம் எண்ணெய் போன்ற எரி பொருட்களிலிருந்து வெளியேறும் புகையும் தொழிலகங்களின் புகை போக்கிகளிலிருந்து வெளிவரும் புகையுமே காற்று மண்டலம் தூய்மை கெடுவதற்குக் காரணம்.

காற்று மண்டலம் தூய்மை கெடுவதற்கு இயற்கையும் சில வழிகளில் உதவி புரிகிறது.

1. காட்டுத் தீ பரவுதல்,
2. தாவரங்கள் மக்கிப் போதல்
3. எரிமலைக் கொந்தளிப்புகள்
4. புழுதி, குப்பை கூளங்களை வாரியடிக்கும் புயற் காற்று.

என்றாலும் காற்று மண்டலம் அசுத்தப் படுவதற்கு முக்கிய காரணம் மனிதனே.

மேலும், நம் வீடுகளில் கழிவுப் பொருட்களும், தொழிற் சாலைகளின் சில கழிவுப் பொருட்களும் திரவ நிலையில் இருப்பவை—இவை மனிதன் குடிநீருக்காகப் பயன் படுத்தும் ஆறு, குளம், போன்ற நீர் நிலைகளில் கலந்து விடுவதுண்டு. நீரில் இருக்கும் ஆக்ஸிஜனை இந்தக் கழிவுப்பொருட்கள் எடுத்துக்கொண்டு விடுவதால், நீர்வாழ் உயிரினங்கள் இறந்துவிட வாய்ப்புண்டு. சில உலோக உப்புக்கள் நீரில் கலப்பதாலும் நீர் வாழ் உயிரினங்கள் இறக்கலாம். மேலும் திரவ நிலைக் கழிவுப் பொருட்கள் கலப்பதால் நீரின் சுவை, நிறம், உப்புத் தன்மை, கடினத் தன்மை போன்றவை மாறவும் வாய்ப்புண்டு.

சில தொழிற்சாலைகளில், திட நிலையில் உள்ள கழிவுப் பொருட்கள் அப்புறப்படுத்தப்படாமல் கிடக்கும். அதனால் அப்பகுதி கால்நடைகளுக்கு ஆபத்து ஏற்படலாம். மேலும், அணுசக்தி மின் நிலையங்களில் வெளியேற்றப்படும் திடக் கழிவுப் பொருட்களிலிருந்து கதிரியக்கம் வெளியாகி மனிதனின் உடலுறுப்புகள் ஊனம் அடையும் அளவுக்குப் பாதிப்பு ஏற்பட வாய்ப்புண்டு.



இதனால் எல்லாம் ஒவ்வொரு தனி மனிதனும் பாதிக்கப்படுகிறான் என்பதை உணர்ந்து ஒவ்வொருவரும் சுற்றுப்புறத்தை அசுத்தப் படுத்தாமல் காக்க வேண்டும். இதற்கெனப் பல்கலைக் கழகங்களும் அரசாங்கமும் எடுக்கும் நடவடிக்கைகளுக்கு ஒத்துழைப்புத் தர வேண்டும்.

—ஜி. வெங்கடராமன்
பி.எஸ்ஸி. மூன்றும் ஆண்டு
அரசினர் தொழில் நுட்பக் கல்லூரி
கோவை



டெஸ்ட் ஆட்டத்தில் பாட்ஸ்மேன் பந்தைக் கையால் தொட்டு, இதன் காரணமாக ஆட்டம் இழந்தவர்கள் இதுவரை உலகில் மூவரே. அவர்கள் தென் ஆப்பிரிக்காவின் டபிள்யூ. ஆர். எண்டின், ஆஸியின் ஹில்டிச் மற்றும் பாகிஸ்தானின் மோஹின் கான்.

—ஏ. தமிழ்ச் செல்வம்
A.M.I.E. முதல் வருஷம்
கோயமுத்தூர் தொழில் நுணுக்கக் கல்லூரி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran

